உ

சிவமயம்

# திருக்கழுக்குன்ற மகிமாசங்கிரகஸ்தவம்



இயற்றியவர்:

காரைக்குடி சைவசித்தாந்தச் செல்வர்

**சொக்கலிங்க ஐயா அவர்கள்**



வெளியிட்டவர்:

**நா. லெ. நா. வெ. நாராயணன் செட்டியார்**

தர்ம நாராயணன் செட்டியார் தெரு,

**காரைக்குடி-1.**

விலை ரூ. 1—00



சைவசித்தாந்தச் செல்வர்

காரைக்குடி சொக்கலிங்க ஐயா அவர்கள்



காரைக்குடி தர்ம நாராயணன் செட்டியார் அவர்கள்

# பதிப்புரை

நா. லெ. நா. லெ நாராயணன் செட்டியார்
தலைமை ஆசிரியர்

டாக்டர் அழகப்ப செட்டியார்
மாதிரி உயர்நிலைப்பள்ளி, காரைக்குடி.

"திருக்கழுக்குன்றம் மகிமாசங்கிரகஸ்தவம்" என்னும் இந்நூலை வெளியிடுவதில், நான் பெருமகிழ்ச்சியடைகிறேன். இது என்னுடைய பாட்டனார் தர்மநாராயணன் செட்டியார் அவர்களால் 1906ம் ஆண்டு வெளியிடப்பட்டது இந்தநூலைக் காரைக்குடி சைவசித்தாந்தச் செல்வர் தவத்திரு. சொக்கலிங்க ஐயா அவர்கள் என் பாட்டனார் விருப்பத்தின்படி இயற்றினார் கள். இந்த நூலின் பழய பிரதி ஒன்றைக் கண்ணுற்றநான், இதை மீண்டும் வெளியிட விரும்பி அதற்கான அனுமதியை ஐயா அவர்கள் குமாரர் சிவபூசைச் செல்வர் திருநாவுக்கரசு செட்டியார் அவர்களிடம் வேண்டினேன் அவர்கள் இதற்கு அன்புடன் அனுமதி அளித்தார்கள். இந்த நூலிற்கு உரை எழுதித்தரச் சைவசித்தாந்தச் செல்வர் பாலகவி இராமநாதன் செட்டியாரவர்களை வேண்டிக் கொண்டேன். அவர்கள் அன்புகூர்ந்து தமது ஆசிரியர் சொக்கலிங்கஐயாவின் உள்ளீடு வழுவாது சிறந்த முறையில் உரை எழுதிக்கொடுத்தார்கள். நூலைச் சிறந்த முறையில் அச்சிட்டுக் கொடுத்த தேவகோட்டைக் காவேரி அச்சகத்தாருக்கு என் நன்றி உரித்தாகுக.

இந்த நூலை வெளியிடும் பொழுது தர்மநாராயணன் செட்டியார் என்று தமிழ் நாட்டில் சிறப்பாக அழைக்கப்பட்டு வந்த எனது பாட்டனுரைப் பற்றிய குறிப்புக்களைக் கீழே தருகிறேன்.

தர்ம நாராயணன் செட்டியார் அவர்கள் காரைக்குடி நகரில் ஸ்ரீமுக வருஷம் கார்த்திகை மாதம் 29உ (1873) பிறந்தார்கள். இவர்கள் சிவ பக்தியும் தர்ம சிந்தனையும் நிறைந்தவர்கள். பர்மா, மலேயா, சென்னை முதலிய பல இடங்களில் தொழில் செய்து சிறந்த முறையில் பொருள் ஈட்டினுர்கள். ஈட்டிய பொருள் அனைத்தையும் அறத்திற்கே நல்கினுர்கள். திருக்கழுக்குன்றத்தில் திரிபுரசுந்தரி மண்டபத் திருப்பணி சுமார் 2 லட்சம் ரூபாய் செலவில் இவர்களுடைய பெருமுயற்சியாலும் சண்முகநாதபுரம் செ. ராம. குடும்பத் தாரின் கூட்டுறவாலும் இந்த நூற்றுண்டின் ஆரம்பத்தில் செய்யப்பட்டுக் கும்பாபிஷேகம் நடைபெற்றது இவர் களுடைய வாழ்க்கைச் சிறப்பைப் பற்றிப் பல வரலாறுகள் செட்டிநாடு முழுவதிலும் கூறப்படுகின்றன. இவர்களது சிறப்பைக் காரைக்குடி தேவாரம் அ. நடேச தேசிகர் பாடியுள்ள சில பாடல்கள் தெளிவாக விளக்குகின்றன. அவை:

செல்வமிகு காரைமா நகரந் தன்னில்
சிறப்புடைய நகரத்தார் மரபில் வாரி

நல்குபெரும் கொடைவள்ளல் தரும நாரா
யணன்செட்டி யாரென்னும் பேரன் புள்ளோர்

தில்லைநட ராஜன்பால் அன்பு பூண்டோர்
தேவாரத் திருமுறைகள் தினமுங் கேட்போர்

செல்வம்வரப் பெற்றபயன் ஈத லென்றே
சிந்தையினில் களிகொண்டு சிறந்து வாழ்ந்தார்.

திருப்பணிகள் செய்கின்ருேம் எனச்சொல் வோர்க்கும்
திருமணங்கள் செய்கின்ருேம் எனச்சொல் வோர்க்கும்
விருப்புடனே நந்தவனம் வைக்கின் ருேர்க்கும்
வேதகலை வளர்க்கின்ற வேதி யர்க்கும்

திருக்குளங்கள் திருப்பணிகள் செய்கின் ருேர்க்கும்
தேவாரத் திருமுறைகள் ஓது வோர்க்கும்
விருப்பமுடன் அறப்பணிகள் செய்கின் ருேர்க்கும்
வேண்டுகின்ற திரவியங்கள் கொடுத்து வந்தார்.

இப்படியே பற்பலவாம் தருமஞ் செய்தே
எழிற்ருெண்டை நாட்டின்கண் கழுக்குன் றத்தில்
ஒப்பரிய அம்மைதிருப் பணிக ளாற்றி
உயர்வான பலபணிகள் ஆங்கே செய்து

செப்பரிய மறைப்பாட சாலை தன்னைச்
சிறப்புடனே காரைநகர் தன்னில் வைத்தார்
ஒப்புடனே யவர்செய்த தரும மெல்லாம்
ஓங்கலிலே தீபமென ஒளிரு மென்றும்.

என்பனவாம்.

இத்தகைய சிறப்புப் பெற்ற என் பாட்டனுர் தர்ம நாராயணன் செட்டியார் அவர்களின் நினைவாக இந்த நூலை வெளியிடுவதற்குத் துணை புரிந்த சிவபூசைச் செல்வர்கள் திருநாவுக்கரசு ஐயா அவர்களுக்கும் சிவ ஸ்ரீ பாலகவி இராமநாதன் செட்டியார் தத்புருஷ தேசிகர் அவர்களுக்கும் என் உளங்கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

சிவமயம்

# இந் நூலாசிரியர் ஸ்ரீமத் சொக்கலிங்க ஐயா அவர்கள் வாழ்க்கைக் குறிப்பு

ஐயா அவர்கள் காரைக்குடிப் பதியில் "யாழ்ப்பாணத் தார் வீடு" என வழங்கும் குடும்பத்தில் மெய்கண்டார் ஆண்டு 632 நள ஆடி மாதம் 23உ அஸ்த நட்சத் திரத்தில் இராமநாதச் செட்டியார் செய்த தவத்தின் பயனாகச் சுத்தாத்துவைத சித்தாந்த சைவ விளக்கம் புரியும் ஞான சூரியனாகத் திருவவதாரம் செய்தார்கள்:

பதினேழாவது வயதில் யாழ்ப்பாணம் சென்றவர் கள் ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக நாவலரவர்களை அடுத்து அவர் களிடத்திலும், அவர்களது மாணவர் பொன்னம்பலம் பிள்ளையவர்களிடத்திலும் இலக்கண இலக்கிய புராண இதிகாச முதலியவைகளைப் பாடம் கேட்டார்கள். பின்னர் தேவகோட்டை ஸ்ரீ வன்றொண்டச் செட்டியாரவர்களிடத் திலும் காரைக்குடி ஸ்ரீ மெய்யப்ப சுவாமிகளிடத்திலும் கற்பன கற்றார்கள்.

யாழ்ப்பாணத்திலிருந்த காலத்தில் சமய — விசேட தீக்ஷைகள் பெற்றுத் திருவாசக பூசையையும் பின்னர்த் திருநல்லூர்ப் பெருமணத்தில் தங்கியிருந்த காலத்தில் நிருவாண தீக்ஷை — சிவலிங்க பூசையையும் பெற்று நியமமாக வழிபாடு செய்து வந்தார்கள்.

ஐயா அவர்களின் நன்முயற்சியில் பல சிவ புண்ணிய நிறுவனங்கள் உண்டாயின. சிதம்பரத்தில் மெய்கண்ட சித்தாந்த வித்தியாசாலை நிறுவிச் சைவ சித்தாந்தம் பரவ, ஆவன செய்துள்ளார்கள்.

இவர்களிடம் பாடம் கேட்ட மாணவர் பலர் இவர்கள் இயற்றிய நூல்கள் நூற்றுக்கு மேற்பட்டன அப்ப மூர்த்திகள் போன்ற திருக்கோலத்துடன் வாழ்ந் திருந்த இவர்கள் பிரமோதூத ஆண்டு கார்த்திகை மீ 28உ உத்திர நன்னாளில் சுத்தாத்துவித சித்தாந்த நன்முத்தி யைப் பெற்றார்கள்.

உ
சிவமயம்

# திருக்கழுக்குன்றம் மகிமாசங்கிரகஸ்தவம்

## காப்பு

மணிபொன் கொழித்தருவி வார்கழுக்குன் றீசற்
கணிதமிழ்ப்பா மாலையினி தாக்கும்—பணிநிகழ
வண்டுவனப் பாடுபுகழ் மாமுகனைக் கண்டிறைஞ்சித்
தொண்டுவனப் பாப்புரிகு தும்.

கொண்டு கூட்டு:- மணிபொன் கொழித்து அருவி வார் கழுக் குன்று ஈசற்கு அணி தமிழ்ப்பா மாலை இனிது ஆக்கும் பணி நிகழப் பாடுபுகழ் வண்டுவன மாமுகனைக் கண்டு இறைஞ்சி வனப்பாகத் தொண்டு புரிகுதும்.

பதவுரை:- மணிபொன் கொழித்து-மணியையும் பொன்னையும் கொழித்துக்கொண்டு, அருவிவார்—அருவி சொரிகின்ற கழுக்குன்று ஈசற்கு—திருக்கழுக்குன்றத்தில் எழுந்தருளி யுள்ள வேதகிரிப்பெருமானுக்கு, அணி-அழகுபொருந்திய தமிழ்ப்பாமாலை-தமிழ்யாப்பாலாகிய பாமாலையை, இனிது ஆக்கும்—இனிதே செய்கின்ற, பணிநிகழ—திருத்தொண்டு செவ்வையாக நிகழுவதற்கு, பாடுபுகழ்—பெரும் புகழை யுடைய, வண்டுவனமாமுகனை—வண்டுவனப் பிள்ளையார் என்னும் யானைமுகக் கடவுளை, கண்டு இறைஞ்சி—தெரிசித்து வணங்கி, வனப்பாக—விதி முறைப்படி, தொண்டு புரிகுதும்—திருத்தொண்டு செய்வோமாக.

"வண்டு வனப்பிள்ளையார்" என்பது இந்தத் திருத் தலத்தில் உள்ள சங்கதீர்த்தக் கரையில் எழுந்தருளி யிருக்கும் விநாயகப் பெருமானது திருநாமம்.

## நூல்

கங்கைவெண் டிங்கள் பொன்பொழி கடுக்கை
        கார்முகில் சேர்முடி கவினுங்
கடவுண்மா மணியே யிடமுமா நாப்பட்
        கலந்தரு ணலந்தரு சேயே
யிங்குல குய்வான் மறைச்சிவ பாத
        விருதயர் சேய்மணி யாகி
யின்சுவை யொழுகு தண்சொலா ரமுத
        மீதர வாதரப் பருகி
யெங்கணு மினிப்பச் சுவைகொணின் செவிக்கிவ்
        வேழையேன் சொல்விட மெனினு
மெறுழ்விட மமுதி னுகர்ந்துயி ரளித்தாய்க்
        கியைபுடைத் தன்றிவே றிலையா
லங்கண பரம சங்கர வரத
        வைம்முக சண்முக வமுதே
யருட்கொழிக் கின்ற திருக்கழுக் குன்றி
        னமலனே யமரர்நா யகனே. 1

கொண்டு கூட்டு:- அம்கண பரம சங்கர வரத ஐம்முக சண்முக அமுதே அருள் கொழிக்கின்ற திருக்கழுக் குன்றின் அமலனே அமரர் நாயகனே கங்கை வெண் திங்கள் பொன்பொலி கடுக்கை கார்முகில் சேர்முடி கவினும் கடவுள்மா மணியே இடம் உமா நாப்பண் கலந்து அருள் நலம் தருசேயே இங்கு உலகு உய்வான் மறைச் சிவபாத இருதயர் சேய்மணியாகி இன்சுவை ஒழுகு தண்சொல் ஆர் அமுதம் ஈதர ஆதரப் பருகி எங்கணும் இனிப்பச் சுவைகொள் நின்செவிக்கு இவ் ஏழையேன் சொல் விடம் எனினும் எறுழ் விடம் அமுதின் நுகர்ந்து உயிர் அளித்தாய்க்கு இயைபு உடைத்து அன்றி வேறு இலை.

பதவுரை:- அம்கண—அழகிய நெற்றிக்கண்ணை உடையவனே, பரம—மேலானவனே, சங்கர—நன்மையைச்

செய்பவனே, வரத—வேண்டும் வரங்களை வழங்குபவனே, ஐம்முக—ஈசானம், தத்புருடம், அகோரம், வாமதேவம், சத்தியோசாதம் என்னும் ஐந்து திருமுகங்களை உடைய வனே, சண்முக—அவற்றுடன் சிவசக்தியினதாகிய அதோ முகத்தையும் உடையவனே, அமுதே—நஞ்சுண்டும் சாவாத அமுத மயமானவனே, அருள் கொழிக்கின்ற—திருவருள்பெருக்கெடுத்து வருகின்ற, திருக்கழுக்குன்றின் அமலனே—திருக்கழுக்குன்றத் திருத்தலத்தில் எழுந் தருளியிருக்கும் இயல்பாகவே பாசங்களின் நீங்கியவனே அமரர் நாயகனே—விண்ணோர் தலைவனே, கங்கை—கங்கையாறும், வெண்திங்கள்—வெள்ளிய பிறைத் திங்களும், பொன்பொலி கடுக்கை—பொன்மயமாகப் பொலிகின்ற கொன்றைப் பூவும், கார்முகில் சேர்முடி—கரிய மேகம் போன்ற சடைமுடியில், கவினும்—அழகு செய்கின்ற, கடவுண்மாமணியே—கடவுளருக்கெல்லாம் முடிமணியாக ஒளிர்பவனே, இடம்—இடப்பாகத்திலே உள்ள, உமா—உமையம்மைக்கும் (உனக்கும்)நாப்பண்—நடுவில், கலந்து—சேர்ந்து, அருள் நலந்தரு—மெய்யடியார் களுக்குத் திருவருள் நலத்தை வழங்குகிற, சேயே—முருகப் பெருமானே, இங்கு—இங்கே, உலகு உய்வான்—இந்த நிலவுலகத்தில் உள்ள உயிர்கள் உய்யும் பொருட்டு, மறை—வேதங்களை, ஓதி—ஓதி உணர்ந்த, சிவபாத இருதயர் சேய் மணி ஆகி—சிவபாத இருதயரது புத்திர ரத்தின மாகி, இன்சுவை ஒழுகு—இனிமைச் சுவை பெருக்கெடுக் கின்ற, தண் சொல்—குளிர்ந்த தேவாரத் திருமுறையாகிய, ஆர் அமுதம்—அரிய அமுதத்தை, ஈதர—வழங்க, ஆதரப் பருகி—அதனை ஆதரவுடன் நுகர்ந்து, எங்கணும் இனிப்ப—தேகமெங்கும் தித்திக்கும்படி, சுவைகொள்—சுவையை ஏற்கின்ற, நின் செவிக்கு—உனது காதுகளுக்கு இவ் ஏழையேன் சொல்—இந்த அறியாமையை உடைய வனாகிய எனது சொற்கள், விடம் எனினும்—நஞ்சாக இருக்குமாயினும், எறுழ் விடம்—கொடிய ஆலகால விடத்தை, அமுதின் நுகர்ந்து—அமுதத்தைப் போல்

உண்டு, உயிர் அளித்தாய்க்கு—எல்லா உயிர்களையும் காப்பாற்றிய உனக்கு, இயைபு உடைத்து அன்றி— பொருத்தம் உடையதே அல்லாமல், வேறு இலை—பிறிது இல்லை, ஆல்—அசை.

தேரிய சீவர் யாவர்க்கும் பொதுவாய்ச்
செகமெலாம் விரிதரு கருணைத்
திருமுக வாரிக் கிருமத காய
சிவசக்தி ரூபநேத் திரத்திற்
சீரிய வடியார்க் கிடையரு தொழுக்குந்
திருவருட் பெருமநின் னருளித்
தீயனேன் றனக்குங் கிட்டுமோ வருளாய்
திருந்து நான் மறையுநிற் றேடி
யோரிய வரிதா வருந்தவ முஞற்ற
வுற்றெதிர் நீர்மலை யுருவா
யுறைமினும் மேனு முறைதுமென் றுரைத்தாங்
கும்மறை யம்முறை யொருவா
தாரிய வேத கிரியெனும் பெயர்கொண்
டகிலமும் போற்றுற வமைந்தாங்
கருட்கொழிக் கின்ற திருக்கழுக் குன்றி
னமலனே யமரர்நா யகனே. 2

கொண்டு கூட்டு:- திருந்தும் நால் மறையும் நின் தேடி ஓரிய அரிது அரும் தவம் உஞற்ற எதிர் உற்று நீர்மலை உருவாய் உறைமின் நும்மேல் நாம் உறைதும் என்று உரைத்து ஆங்கும் மறை அம்முறை ஒருவாது ஆரிய வேதகிரி எனும் பெயர்கொண்டு அகிலமும் போற்று உற அமைந்து ஆங்கு அருள் கொழிக்கின்ற திருக்கழுக் குன்றின் அமலனே அமரர் நாயகனே தேரிய சீவர் யாவர்க்கும் பொதுவாய்ச் செகம் எலாம் விரிதரு

கருணைத் திருமுக வாரிக்கு இருமதகு ஆய சிவசக்தி ரூப நேத்திரத்தில் சீரிய அடியார்க்கு இடையறுது ஒழுக்கும் திரு அருள் பெரும நின் அருள் இத் தீயனேன் தனக்கும் கிட்டுமோ அருளாய்.

பதவுரை:- திருந்தும்—வியாத முனிவரால் ஒழுங்கு செய்யப் பட்ட, நான்மறையும்—இருக்கு, யசுர், சாமம், அதர்வணம் என்னும் நான்கு வேதங்களும், நின்தேடி-உன்னைத்தேடி, ஓரிய அரிது—தெளியமாட்டாமல், அருந்தவம் உஞற்ற—அரிய தவத்தைச் செய்ய, எதிர்உற்று—அவைகளுக்கு முன்னே தோன்றி, நீர்மலை உருவாய் உறைமின்—நீங்கள் மலைவடிவம் கொண்டு இருங்கள், உம்மேல் நாம் உறைதும்-உங்களுக்கு மேலே நாம் வீற்றிருக்கின்றோம், என்று உரைத்து, என்று கூறி ஆங்கும்-அவ்விடத்திலும் மறை—அவ்வேதங்கள், அம்முறை ஒருவாது—அவை அமையவேண்டிய முறை வழுவாமல் இருக்கு வேதம் வேராகவும் யசுர்வேதம் அடியாகவும், சாமவேதம் இடையாகவும், அதர்வண வேதம் முடியாகவும், ஆரிய—மேலான, வேதகிரி எனும் பெயர்கொண்டு—மறைமலை என்னும் திருப்பெயரைக் கொண்டு, அகிலமும் போற்று உற—அனைத்துலகங்களும் ஏத்தித் துதிக்க, அமைந்து—பொருந்தி இருக்க, ஆங்கு—அங்கே அருள் கொழிக் கின்ற—திருவருள் பெருக்கெடுத்து வருகின்ற, திருக் கழுக்குன்றின் அமலனே-திருக்கழுக்குன்றத் திருத்தலத் தில் எழுந்தருளியுள்ள இயல்பாகவே பாசங்களின் நீங்கிய வனே, அமரர் நாயகனே—விண்ணோர் தலைவனே, தேரிய—தெளிவு பெற்ற, சீவர்யாவர்க்கும்-சீவகோடிகள் அனைத்திற்கும், பொதுவாய்—பொதுவாக, செகம்எலாம்—உலகம் முழுவதும், விரிதரு—விரிந்து செல்லுகின்ற, கருணைத் திருமுக வாரிக்கு—அருள் மயமான அழகிய முகமாகிய நீர் நிலைக்கு, இருமதகு ஆய—இரண்டு மடை களாகி விளங்குகின்ற, சிவசக்தி ரூப நேத்திரத்தில்—சிவசக்தி வடிவமான கண்களில், சீரிய அடியார்க்கு—

சிறந்த அடியார்களுக்கு, இடையறுது ஒழுக்கும்—இடையீடின்றிப் பெருக்குகின்ற, திருஅருள் பெரும—பெருங் கருணையை உடைய பெருமானே, நின் அருள்—உனது திருவருள், இத்தீயனேன் தனக்கும்-இந்தத் தீயவனுகிய எனக்கும் கிட்டுமோ—கிடைக்குமோ, அருளாய்—அருள் புரிவாயாக, ஆல்—அசை.

சீவர்க ளெவர்க்கு மும்மல மகற்றித்
 திருந்தருள் புரிகுதும் வம்மின்
செகத்துளீ ரெனமுன் றெரித்தருள் குறிபோற்
 றிகழ்திரி புண்டர நுதலெந்
தேவனே யெளியே னின்னரு ளுணர்ந்துஞ்
 செந்நெறி முன்னுரு தந்தோ
தியங்குத லொழிந்துன் வயங்குல வடிக்கீழ்ச்
 செல்லுமா நல்லருள் புரியாய்
தாவினுன் குகத்துங் கழுகுருவாய
 சண்டனே பிரசண்ட னிருவர்
சாற்றுசம் பாதி சடாயுவென் றிருவர்
 சம்புகுத் தன்சொன்மா குத்த
னுவிரு வோர்சம் பாதியென் றிருவ
 ரருச்சனை செயலினப் பேர்கொண்
டருட்கொழிக் கின்ற திருக்கழுக் குன்றி
 னமலனே யமரர்நா யகனே! 3

கொண்டு கூட்டு:— தா இல் நான்கு உகத்தும் கழுகு உருவாய சண்டன் பிரசண்டன் இருவர் சாற்று சம்பாதி சடாயு என்று இருவர் சம்புகுத்தன் சொல்மாகுத்தன் ஆ(க) இருவோர் சம்பு ஆதி என்று இருவர் அருச்சனை செயலின் அப்பேர் கொண்டு அருள் கொழிக்கின்ற திருக்கழுக் குன்றின் அமலனே. அமரர் நாயகனே சீவர்கள் எவர்க்கும்

மும்மலம் அகற்றித் திருந்து அருள் புரிகுதும் வம்மின் செகத்து உ(ள்)ளீர் என முன் தெரித்து அருள் குறிபோல் திகழ் திரிபுண்டர நுதல் எம் தேவனே எளியேன் நின் அருள் உணர்ந்தும் செந்நெறி முன் உறுது அஃதோ தியங்குதல் ஒழிந்து உன்வயம் குலவு அடிக்கீழ் செல்லும் மாநல் அருள் புரியாய்.

பதவுரை:— நாஇல் நான்கு உகத்தும்—குறைவு இல்லாத கிருதம் திரேதம், துவாபரம், கலி ஆகிய நான்கு யுகங்களிலும், கழுகு உரு ஆய—கழுகு உருவத்தை அடைந்த, சண்டன் பிரசண்டன் இருவர்—சண்டனும் பிரசண்டனுமாகிய இருவரும், சாற்று—சொல்லப் பெறுகின்ற, சம்பாதி சடாயு என்று இருவர்—சம்பாதியும் சடாயுவும் ஆகிய இருவரும், சம்புகுத்தன் சொல்மாகுத்தன் ஆக இருவோர்—சம்புகுத்தனும் சொல்லப் பெறுகின்ற மாகுத்தனும் ஆகிய இருவரும், சம்பு ஆதி என்று இருவர்—சம்புவும் ஆதியும் ஆகிய இருவரும், அருச்சனை செயலின்—பூசை செய்ததால், அப்பேர்கொண்டு—அந்தக் கழுகுகளின் பெயரைக்கொண்டு, அருள் கொழிக்கின்ற—திருவருள் பெருக்கெடுத்து வருகின்ற, திருக்கழுக்குன்றின் அமலனே—திருக்கழுக்குன்றத் திருத்தலத்தில் எழுந்தருளியுள்ள இயல்பாகவே பாசங்களின் நீங்கியவனே, அமரர் நாயகனே—விண்ணோர் தலைவனே, சீவர்கள் எவர்க்கும்—எல்லாச் சீவர்களுக்கும், மும்மலம் அகற்றி—மாயை, கன்மம், ஆணவம் ஆகிய மூன்று மலங்களையும் ஒழித்து, திருந்து அருள் புரிகுதும்—செம்மையான அருளை வழங்குவோம், வம்மின் செகத்து உள்ளீர் என-வாருங்கள் உலகத்தில் வாழுபவர்களே என்று, முன் தெரித்து அருள் குறி போல்—முன்னே காட்டி அருளுகின்ற குறிப்பைப் போல, திகழ்—விளங்குகின்ற, திரிபுண்டர நுதல்—திருநீற்றின் மூன்று கீற்றுக்கள் அமைந்த நெற்றியை உடைய, எம் தேவனே—எமது கடவுளே, எளியேன்—சிறியேன், நின் அருள் உணர்ந்தும்—உனது திருவருட்

பெருமையை நன்கு தெரிந்தும், செந்நெறி முன் உருது—செம்மை நெறியில் தலைப்படாமல், அந்தோ—ஐயோ, தியங்குதல் ஒழிந்து—தடுமாறுதலைத் தவிர்ந்து, உன் வயம் குலவு அடிக்கீழ்—உனது வெற்றிமிக்க திருவடியின் கீழே. செல்லும்—செல்லுகின்ற, மா நல் அருள் புரியாய்—பெரிய நல்ல கருணையைப் புரிவாயாக, ஏகாரம்—அசை.

*மாணிக்க மணியின் பரப்பொளி மேலும்*
*வயிரமா மணியொளி பரப்ப*
*மற்றத னுப்ப ணிந்திர நீல*
*மணியொளி போன்மணி கண்டா*
*பேணிக்கொண் முனிவர் புத்திரர் சண்டன்*
*பிரசண்ட னென்றிவர் வினையின்*
*பெற்றியிற் கழுகா யுற்றனர் தாதை*
*பேச்சர சாட்சியை வெறுத்துப்*
*பாணித்த லின்றி வினவிநின் றலமே*
*பற்றென வுற்றனர் பன்னுட்*
*பரிந்துபூ சிப்ப வெதிர்ந்துவேட் டாங்குப்*
*பயிலுமிக் கிரேதத்தி னீற்றி*
*லாணித்தன் மோக்கந் தருதுமென் றருளு*
*மையனே யுய்யுமா றருளா*
*யருட்கொழிக் கின்ற திருக்கழுக் குன்றி*
*னமலனே யமரர்நா யகனே.* 4

கொண்டு கூட்டு:- அருள் கொழிக்கின்ற திருக்கழுக்குன்றின் அமலனே அமரர்நாயகனே மாணிக்க மணியின் பரப்பு ஒளிமேல் வயிர மாமணி ஒளி பரப்ப அதன் நாப்பண் இந்திர நீலமணி ஒளி போல் மணிகண்டா பேணிக் கொள் முனிவர் புத்திரர் சண்டன் பிரசண்டன் என்று இவர் வினையின் பெற்றியில் கழுகாய் உற்றனர் தாதை பேச்சு அரசாட்சியை வெறுத்துப் பாணித்தல் இன்றி வினவி நின் தலமே பற்று என உற்றனர். பன்னாள் பரிந்து பூசிப்ப எதிர்ந்து வேட்டாங்குப் பயிலும்

இக்கிரேதத்தின் ஈற்றில் ஆணித்தன் மோக்கம் தருதும் என்று அருளும் ஐயனே உய்யும் ஆறு அருளாய்.

பதவுரை:- அருள் கொழிக்கின்ற—திருவருள் பெருக்கெடுத்து வருகின்ற, திருக்கழுக்குன்றின் அமலனே—திருக்கழுக்குன்றத் திருத்தலத்திலே எழுந்தருளியுள்ள இயல்பாகவே பாசங்களின் நீங்கியவனே, அமரர் நாயகனே—விண்ணோர் தலைவனே, மாணிக்க மணியின்—சிவப்பு மணியினது, பரப்பு ஒளி மேல்—விரித்த ஒளியின் மேலே, வயிர மா மணி ஒளி பரப்ப—பெரிய வயிரமணி ஒளியைச் செய்ய, அதன்நாப்பண்—அதன் நடுவில், இந்திர நீலமணி ஒளி போல்—இந்திர நீலமணியின் ஒளியைப் போல விளங்குகின்ற, மணி கண்டா—நீலகண்டத்தை உடையவனே, பேணிக் கொள் முனிவர்—உன்னைப் பேணி உள்ளத்திலே கொண்ட விருத்தா சிரவா என்னும் முனிவருடைய, புத்திரர்—புதல்வர்களாகிய, சண்டன் பிரசண்டன் என்னும் இருவரும், வினையின் பெற்றியால்—ஊழ்வினை வயத்தால், கழுகாய் உற்றனர்—கழுகு வடிவத்தை அடைந்தார்கள். தாதை—தந்தையாகிய விருத்தா சிரவா முனிவரது, பேச்சு—பேச்சையும், அரசாட்சியை வெறுத்து—அரசாட்சியையும் புறக்கணித்து ஒதுக்கி, பாணித்தல் இன்றி—தாமதம் இல்லாமல்,வினவி—தவம் செய்யத் தக்க இடத்தைக் கேட்டறிந்து, நின் தலமே பற்று என—உனது திருத்தலமே பற்றுக்கோடு எனக்கொண்டு, உற்றனர்-வந்தார்கள், பன்னாள் பரிந்து பூசிப்ப—அவர்கள் பல நாட்கள் அன்புடன் உன்னைப் பூசை செய்ய, எதிர்ந்து—அவர்கள் முன்னே நீ தோன்றி, வேட்டாங்கு—விரும்பியபடியே, பயிலும் இக்கிரேதத்தின் ஈற்றில்—நிகழுகின்ற இக்கிரேதாயுக முடிவில், ஆணி—முதன்மையாகிய, தன் மோக்கம் தருதும்—எம்மை அடையும் முத்திப் பேற்றை வழங்குவோம், என்று அருளும் ஐயனே—என அருள் செய்த தலைவனே, உய்யும்

ஆறு அருளாய்—யான் உய்யும் வழியை எனக்கு அருளு வாயாக. உம், மற்று—அசை.

சிவபெருமானது திருமேனி செம்மை நிறமும், அதில் பூசப்பெற்ற திருநீறு வெண்மை நிறமும், அவரது கழுத்திலுள்ள நஞ்சுத் தோற்றம் கருநிறமும் உடையன ஆதலின், அவை முறையே மாணிக்க மணி, வயிரமணி, நீலமணியாக இப்பாடலில் குறிக்கப்பெற்றுள்ளன.

*சிவமெனென் றுயு மலர்மண மேயுந்*
*திரிபுர சுந்தரி யுடன்சார்*
*திறத்திரண் டாயும் வேறிலத் துவிதந்*
*தெரித்தென வெண்மையே செம்மை*
*திவளுநீற் றெழின்மார் பழகுகண் டெளியேன்*
*றீவினை யோவினை யுறுமோ*
*திறல்கொள்சம் பாதி சடாயுள மிகலிச்*
*சேண்செலீஇப் பாநுவின் பாங்கர்த்*
*தவமுனி சாபத் துடல்கரீஇப் புடவி*
*தனில்விழுந் தினைந்தவண் வேத*
*சைலனைப் பூசை புரிமினென் றனையோர்*
*சாற்றியாங் கடைந்துபூ சித்தாங்*
*கவிர்வலி பெறுபு திரேதத்தி னீற்றி*
*னவர்கதி பெறவினி தளித்த*
*வருட்கொழிக் கின்ற திருக்கழுக் குன்றி*
*னமலனே யமரர்நா யகனே* 5

கொண்டு கூட்டு:— திறல் கொள் சம்பாதி சடாயு உளம் இகலிப் பாநுவின் பாங்கர்ச் சேண் செலீஇத் தவமுனி சாபத்து உடல் கரீஇப் புடவி தனில் விழுந்து இனைந்து அவண் வேத சைலனைப் பூசை புரிமின் என்று அனையோர் சாற்றியாங்கு அடைந்து பூசித்து ஆங்கு அவிர் வலி பெறுபு திரேதத்தின் ஈற்றில் அவர் கதிபெற இனிது அளித்த அருள் கொழிக்கின்ற திருக்கழுக்

குன்றின் அமலனே அமரர் நாயகனே சிவம் என்(ன)
ஒன்றுயும் மலர் மணம் ஏயும் திரிபுர சுந்தரியுடன் சார்
திறத்து இரண்டாயும் வேறு இல் அத்து விதம் தெரித்து
என வெண்மை செம்மை திவளும் நீற்று எழில் மார்பு
அழகு கண்டு எளியேன் தீவினை ஒவினை உறுமோ.

பதவுரை:- திறல் கொள் சம்பாதி—வலிமையைக் கொண்ட சம்பாதியும், சடாயு—சடாயுவும், உளம் இகலி—தத்தம் வலிமைகளை எண்ணி மனம்பகைத்து, பாநுவின் பாங்கர்ச் சேண் செலீஇ—சுதிரவன் அருகிலேயுள்ள மேலிடத்தை அடைந்து, தவமுனி சாபத்து—தவத்தை உடைய முனிவர்களது சாபத்தினுல், உடல் கரீஇ—உடம்பு கருகி, புடவி தனில் விழுந்து—நிலத்தில் விழுந்து, இனேந்து—வருந்தி, அவண்—அங்கே, வேதசைலனைப் பூசை புரிமின் என்று—வேதகிரீசனைப் பூசை செய்யுங்களென்று, அனையோர் சாற்றியாங்கு—அந்த முனிவர்கள் சொல்லியதைக் கடைப்பிடித்து, அடைந்து — வேதகிரியை அடைந்து, பூசித்து—பூசனை செய்து, ஆங்கு—அவ்விடத்தில், அவிர் வலி பெறுபு—மிகுந்த வலிமையைப் பெற்று, திரேதத்தின் ஈற்றில்—திரேதாயுக முடிவில், அவர்—அவ்விருவரும், கதிபெற—சிவகதியைப் பெறும்படி, இனிது அளித்த-இனிமையாகக் கொடுத்த, அருள்கொழிக்கின்ற—திருவருள் பெருக்கெடுத்து வருகின்ற, திருக்கழுக்குன்றின் அமலனே-திருக்கழுக்குன்றத் திருத்தலத்திலே எழுந்தருளியுள்ள இயல்பாகவே பாசங்களின் நீங்கியவனே, அமரர் நாயகனே—விண்ணேர் தலைவனே, சிவம் என்ன ஒன்றுயும்—சிவம் என்று சொல்லும்பொழுது ஒன்றுகியும், மலர் மணம் ஏயும்-பூவும் மணமும் போன்று, திரிபுர சுந்தரியுடன்—திரிபுர சுந்தரியாகிய சிவசக்தியுடன், சார் திறத்து இரண்டாயும்—சேர்ந்துள்ள வகையில் இரண்டாகியும், நின்று, வேறு இல்—வேறில்லாத, அத்துவிதம் தெரித்து என—இரண்டற்ற தன்மையை விளக்கியதைப் போல, வெண்மை செம்மை திவளும்—

வெண்மையும் செம்மையும் கலந்திருக்கின்ற, நீற்று எழில் மார்பு அழகு கண்டு—திருநீற்றுப் பொலிவை உடைய மார்பழகைப் பார்த்து, எளியேன் தீவினை—சிறியேனது தீவினை, ஒவினை உறுமோ—நீங்குதல் செய்யுமோ? ஏ—அசை.

*முற்றுணர் வாதி யெண்குண முடைய*
*முழுமுத லுமாபதி யொருவன்*
*முராரிமுன் ஞய சுராதிப ருணர்த்தின்*
*முதுக்குறை சீவரென் றெவருந்*
*தெற்றென வுணர்வான் கொண்டன வெண்டோட்*
*செல்வனே யுய்வகை யருளாய்*
*திறலுடைச் சம்பு குத்தன்மா குத்தன்*
*சிவம்பெரி தருட்சத்தி பெரிதென்*
*றுற்றெழு பிணக்கி னுஞ்சொலாற் கழுகி*
*னுருக்கொடு முருக்கிட ருழப்ப*
*வுடனருள் புரிந்து துவாபர யுகங்கா*
*றுந்நமைப் பூசனை புரிமி*
*னற்றமின் மோக்க மீற்றினீ ரடைவா*
*னருள்குது மென்றினி தளித்த*
*வருட்கொழிக் கின்ற திருக்கழுக் குன்றி*
*னமலனே யமரர்நா யகனே.* ௬

கொண்டு கூட்டு:— திறல் உடைச் சம்புகுத்தன் மாகுத்தன் சிவம் பெரிது அருட்சத்தி பெரிது என்று உற்று எழு பிணக்கின் நும்சொ(ல்)லால் கழுகின் உருக்கொடு முருக்கு இடர் உழப்ப உடன் அருள் புரிந்து இத் துவாபர யுகம் காறும் நமைப் பூசனை புரிமின் அற்றம் இல் மோக்கம் ஈற்றில் நீர் அடைவான் அருள்குதும் என்று இனிது அளித்த அருள் கொழிக்கின்ற திருக்கழுக் குன்றின் அமலனே அமரர் நாயகனே முற்றுணர்வு ஆதி எண்குணம் உடைய முழுமுதல் உமாபதி ஒருவன் முராரி முன்ஆய சுராதிபர் உணர்த்தின் முதுக்குறை

சீவர் என்று எவரும் தெற்றென உணர்வான் கொண்ட(து) என எண்தோள் செல்வனே உய்வகை அருளாய்.

பதவுரை:- திறல் உடை—வலிமையையுடைய, சம்புகுத்தன் மாகுத்தன்-சம்புகுத்தனும் மாகுத்தனும் ஆகிய இருவரும் சிவம் பெரிது—சிவமே பெரியது, அருட்சத்தி பெரிது—திருவருட் சத்தியே பெரியது, என்று உற்று எழு—என்று வாதிக்க முற்பட்டு அதனாலெழுந்த, பிணக்கின்—மாறுபாட்டினால் வெளிப்பட்ட, நும் சொல்லால்—சிவமும் சத்தியுமாகிய உங்கள் சாபத்தால், கழுகின் உருக்கொடு—கழுகுகளின் வடிவத்தை அடைந்து, முருக்கு இடர் உழப்ப—கொடுந் துன்பத்தை அடைய, உடன் அருள் புரிந்து—உடனேகக் கருணை காட்டி, இத் துவாபரயுகம் காறும்—இந்தத் துவாபர யுகம் முடியும் வரை, எமைப் பூசனை புரிமின்—நம்மைப் பூசிப்பீர்களாக, அற்றம் இல் மோக்கம்—முடிவில்லாத முத்திப்பேற்றை, ஈற்றில்—இந்த யுக முடிவில், நீர் அடைவான் அருள்குதும் என்று—நீங்கள் பெறும்படி அருளுவோம் என்று, இனிது அளித்த—இனிதே சாப விமோசனம் கொடுத்த, அருள் கொழிக்கின்ற—திருவருள் பெருக்கெடுத்து வருகின்ற திருக்கழுக்குன்றின் அமலனே-திருக்கழுக்குன்றத் திருத் தலத்திலே எழுந்தருளியுள்ள இயல்பாகவே பாசங்களின் நீங்கியவனே, அமரர் நாயகனே—விண்ணோர் தலைவனே, முற்றுணர்வு ஆதி—முற்றுணர்வு, தன்வயம், இயற்கை அறிவு, இயல்பாகவே பாசநீக்கம், பேராற்றல், தூய உடம்பு வரம்பில் இன்பம், பேரருள் ஆகிய, எண்குணம் உடைய—எட்டுக் குணங்களையும் உடைய, முழுமுதல்—முழுமுதற்கடவுள், உமாபதி ஒருவன்—உமை மணவாள ராகிய சிவபெருமான் ஒருவரே, முராரி முன் ஆய—திருமால் முதலாகவுள்ள, சுராதிபர்—தலைமைத்தேவர்கள் எல்லோரும், உணர்த்தின்—பிறர் அறிவித்தால் அறியும், முதுக்குறை—சிற்றறிவை உடைய, சீவர் என்று

—உயிர் வருக்கத்தவரே என்று, எவரும் தெற்றெண உணர்வான்—யாரும் தெளிவாக உணர்ந்து கொள்ளும் பொருட்டு, கொண்ட என—கொண்டதைப் போல, எண் தோள் செல்வனே—எட்டுத் தோள்களைக் கொண்டிருக்கிற அருட் செல்வனே, உய்வகை அருளாய்—யான் உய்யும் வகையை அருளுவாயாக.

*சகலசீ வரையு மஞ்சலென் றவர்வெஞ்*
*சமலமா தியகவர்ந் தருளுந்*
*தனமுணர்த் தபய வரதமான் மழுமுன்*
*றரித்தருள் கரத்திரு மலரோ*
*யிகலொருங் கொழித்துண் ணெகுநிலை யளித்திவ்*
*வேழையே னூழைநீத் தருளா*
*யிம்பரிற் பூடா விருத்தவா தவங்கண்*
*டென்விழை வென்னநன் மோக்கத்*
*தகையரு ளென்னக் கலிமுடி வெனவெந்*
*தமைப்புலன் கெடுக்குமித் தருணந்*
*தருகெனக் கழுகா குதிரென முடிவு*
*சாற்றென வீற்றள வெமையீண்*
*டகமுறப் பூசித் தமர்கெனச் சம்பு*
*வாதியென் றிருவராங் காற்ற*
*வருட்கொழிக் கின்ற திருக்கழுக் குன்றி*
*னமலனே யமரர்நா யகனே.* 7

கொண்டு கூட்டு:— இம்பரில் பூடா விருத்தவா தவம் கண்டு என் விழைவு என்ன நல் மோக்கத் தகை அருள் என்னக் கலி முடிவு என எம் தமைப் புலன் கெடுக்கும் இத்தருணம் தருக எனக் கழுகு ஆகுதிர் என முவ்வு சாற்று என ஈற்று அளவு எமை ஈண்டு அகம் உறப் பூசித்து அமர்க எனச் சம்பு ஆதி என்று இருவர் ஆங்கு ஆற்ற அருள் கொழிக்கின்ற திருக்கழுக்குன்றின் அமலனே

அமரர் நாயகனே சகல சீவரையும் அஞ்சல் என்று அவர் வெம் சமலம் ஆதிய கவர்ந்து அருளும் தனம் உணர்த்து அபய வரதம் மான் மழு முன் தரித்து அருள் கரத் திருமலரோய் இகல்ஒருங்கு ஒழித்து உள் நெகும் நிலை அளித்து இவ் ஏழையேன் ஊழை நீத்து அருளாய்.

பதவுரை:— இம்பரில்—இந்நிலவுலகத்தில், பூடா விருத்தவா தவம் கண்டு — பூடா விருத்தவா என்னும் இரண்டு முனிவர்களது தவத்துக்கு மகிழ்ந்து, என்விழைவு என்ன— உங்கள் விருப்பம் யாது என்று கேட்க, நல் மோக்கத் தகை அருள் என்ன —நல்ல முத்தியாகிய பேற்றை அருளவேண்டுமென்று அவர்கள் கேட்க, கலி முடிவு என — அதனைக் கலியுக முடிவில் அருளுவோம் என்று சொல்ல, எந்தமை — எங்களை, புலன் கெடுக்கும்— சுவை, ஒளி ஊறு, ஓசை, நாற்றம் ஆகிய ஐம்புலன் களும் கெடுத்து விடும், (ஆதலால்) இத் தருணம் தருக என—இப்பொழுதே தரவேண்டுமென்று அவர்கள் கேட்க, கழுகு ஆகுதிர் என — கட்டளையை மறுத்த குற்றத்திற்குப் பரிகாரமாகக் கழுகு வடிவத்தை அடை யுங்கள் என்று சாபம் கொடுக்க, முடிவு சாற்று என— சாப நீக்க வேளையை அருள வேண்டுமென அவர்கள் வேண்ட, ஈற்றளவு—கலியுக முடிவு வரை, எமை — எம்மை, ஈண்டு—இத் திருத்தலத்தில், அகம் உற — உள்ளம் பொருந்த, பூசித்து அமர்க என — பூசை செய்து வாழுங்கள் என்று அருள, சம்பு ஆதி என்று இருவர் — சம்புவும் ஆதியும் என்ற அந்த இரண்டு கழுகுகளும், ஆங்கு ஆற்ற — அதன்படி பூசித்துக் கொண்டிருக்க, அருள் கொழிக்கின்ற — திருவருள் பெருக்கெடுத்து வருகின்ற, திருக்கழுக்குன்றின் அமலனே—திருக்கழுக்குன்றத் திருத்தலத்திலே எழுந் தருளியுள்ள இயல்பாகவே பாசங்களின் நீங்கியவனே,

அமரர் நாயகனே—விண்ணோர் தலைவனே, சகல சீவரை யும்—எல்லா உயிர்களையும், அஞ்சல் என்று—அஞ்சா தீர்கள் என்று, அவர்—அவர்களது, வெம்—கொடிய, சமலம் ஆதிய—மூலமலமாகிய ஆணவம் முதலிய மலங் களை, கவர்ந்து—வாங்கி, அருளும் தனம் உணர்த்து—அருளும் தன்மையை உணர்த்துகின்ற, அபயவரதம்—அபய வரதங்களையும், மான் மழு — மான் மழுக்களையும், முன் தரித்து — முன்னே கொண்டு, அருள் — கருணை புரிகின்ற, கரத் திரு மலரோய்— அழகிய கைம் மலர் களை உடையவனே, இகல் ஒருங்கு ஒழித்து—எனக்கு உள்ள அகப்பகை புறப்பகை, ஆகியவற்றை அகற்றி, உள் நெகும் நிலை அளித்து — உள்ளம் குழையும் தன் மையை வழங்கி, இவ் ஏழையேன்—இந்த ஏழையேனது ஊழை நீத்து — முன்வினையை ஒழித்து, அருளாய்—அருள் புரிவாயாக.

தண்ணருள் பெறுவார் தம்மையா வரித்த
சகசமா மலத்தினைப் பிரிக்குந்
தன்மையிவ் வாறென் றுணர்த்தலி னலக்கண்
சகத்தினுக் கிழைத்தகுஞ் சரத்தைத்
துண்ணென வெருவ வீர்த்துரி வாங்கித்
தூயகஞ் சுகமென வணிந்த
தோன்றலே யான்ற நின்பெரு மகிமை
சுருதியா தியவரு ணூலோர்ந்
தெண்ணினு ளமைத்த வெம்மனோர்க் கரிதென்
திருகழு குருவுடை முனிவோ
ரிக்கலி யுகத்தில் யாவருங் காண
விலக்கருஞ் சிறப்பெவ ரிசைப்பா
ரண்ணலே யடியா ரெண்ணியாங் களிக்கு
மதுதொழி லாகவீற் றிருந்தே
யருட்கொழிக் கின்ற திருக்கழுக் குன்றி
னமலனே யமரர்நா யகனே 8

கொண்டு கூட்டு:— அண்ணலே அடியார் எண்ணியாங்கு அளிக்கும் அது தொழிலாக வீற்றிருந்து அருள் கொழிக்கின்ற திருக்கழுக்குன்றின் அமலனே அமரர் நாயகனே தண்ணருள் பெறுவார் தம்மை ஆவரித்த சகசமா மலத்தினைப் பிரிக்கும் தன்மை இவ்வாறுஎன்று உணர்த்தலின் அலக்கண் சகத்தினர்க்கு இழைத்த குஞ்சரத்தைத் துண் என வெருவ ஈர்த்து உரிவாங்கித் தூய கஞ்சுகம் என அணிந்த தோன்றலே ஆன்ற நின் பெருமகிமை சுருதி ஆதிய அருள்நூல் ஓர்ந்து எண்ணினுள் அமைத்தல் எம்மனோர்க்கு அரிது என்று இரு கழுகு உருவுடை முனிவோர் இக் கலியுகத்தில் யாவரும் காண இலக்கு அரும் சிறப்பு எவர் இசைப்பார்.

பதவுரை:— அண்ணலே—மேலானவனே, அடியார் எண்ணியாங்கு — மெய்யடியார்கள் விரும்பியபடி, அளிக்கும் அது— வழங்குவதையே, தொழிலாக — கடமையாகக் கொண்டு, வீற்றிருந்து — எழுந்தருளியிருந்து, அருள் கொழிக்கின்ற—திருவருள் பெருக்கெடுத்து வருகின்ற, திருக்கழுக்குன்றின் அமலனே — திருக்கழுக்குன்றத் திருத்தலத்திலே எழுந்தருளியுள்ள இயல்பாகவே பாசங்களின் நீங்கியவனே, அமரர் நாயகனே — விண்ணோர் தலைவனே, தண்ணருள் பெறுவார் தம்மை—குளிர்ந்த திருவருளைப் பெறுதற்குரிய சத்திநிபாதர்களை, ஆவரித்த — அறிவை மறைத்துக் கட்டுப்படுத்திய, சகச மா மலத்தினை—மூல ஆணவமாகிய பெரிய மலத்தை, பிரிக்கும் தன்மை — அவர்களிலிருந்து பிரித்து ஒதுக்குகின்ற முறைமை, இவ்வாறே என்று உணர்த்தலின்—இவ்வாறே என்று நமக்கு உணர்த்துவதைப் போல, அலக்கண் — பெருந்துன்பத்தை, சகத்தினுக்கு இழைத்த — உலகத்துக்குச் செய்த. குஞ்சரத்தை—யானையை. துண் என வெருவ — திடுக்கிட்டு அஞ்சும்படி, ஈர்த்து—பிடித்து; இழுத்து, உரி வாங்கி— அதன் தோலை உரித்தெடுத்து, தூய கஞ்சுகம் என

அணிந்த—தூய்மையான போர்வை என்று சொல்லும்படி அணிந்துகொண்ட, தோன்றலே—புகழாளனே, ஆன்ற—மிகுதியான, நின் பெரு மகிமை-உனது பெரிய சிறப்பை, சுருதி ஆதிய அருள் நூல் ஓர்ந்து—வேத சிவாகமம் முதலிய அருள் நூல்களை ஆராய்ந்து, எண்ணினுள் அமைத்தல் — அளவுக்குட்பட நிலைநாட்டுதல், எம் மனோர்க்கு அரிது என்று—எம் போன்றவர்களுக்கு அருமையானது என்று, இரு கழுகு உருவுடை முனிவோர்—இரண்டு கழுகு உருவம் கொண்ட முனிவர்கள், இக் கலியுகத்தில் — இந்தக் கலியுகத்தில், யாவரும் காண—எல்லோரும் பார்க்க, இலக்கு அரும் சிறப்பு—விளக்குகின்ற பெருஞ்சிறப்பை, எவர் இசைப்பார்—யாரே சொல்லவல்லார். ஏ. அசை.

*அரைதிகழ் சருமாம் பரதிகம் பரனென்*
*றறைகுவ தென்கொனின் றனையே*
*தாகமா தியநூ லொன்றினுந் தோயா*
*வதிதனே யாமென்சூ சகமோ*
*வரைசன்முன் ஞளிற் சுரகுரு வென்பா*
*னருள்பெறத் திருவுளத் தடைத்தே*
*யனையனை வேட்டை வினையினில் வருவித்*
*தவன்செய்கோ கத்தியா தியதேய்ந்*
*தரைபொடி யாகி யழிவுறச் சம்பு*
*வாதியென் றிருகழு கறவோ*
*ரலகினு லமைத்த சுனையின்மூழ் குவித்தங்*
*கலகிலாத் திருப்பணி யாற்றி*
*யரைமதி நுதலி மாசலை பாலுன்*
*னருள்பெறீஇ யுய்யவி டளித்தா*
*யருட்கொழிக் கின்ற திருக்கழுக் குன்றி*
*னமலனே யமரர்நா யகனே.*

கொண்டு கூட்டு:— அரைசன் முன்னாளில் சுரகுரு என்பான் அருள்பெறத் திருவுளத்து அடைத்து அனையனை வேட்டை வினையினில் வருவித்து அவன் செய் கோகத்தி ஆதிய தேய்ந்து அரை பொடியாகி அழிவுறச் சம்பு ஆதி என்று இரு கழுகு அறவோர் அலகினால் அமைத்த சுனையில் மூழ்குவித்து அங்கு அலகு இலாத் திருப்பணி ஆற்றி அரைமதி நுதல் இமாசலை பால் உன் அருள் பெறீஇ உய்ய வீடு அளித்தாய் அருள் கொழிக்கின்ற திருக்கழுக்குன்றின் அமலனே அமரர் நாயகனே அரை திகழ் சரும அம்பரதிகம்பரன் என்று அறைகுவது என் கொல் நின்றனை வேதாக(ம)ம் ஆதிய நூல் ஒன்றினும் தோயா அதீதன் என் சூசகமோ

பதவுரை:— அரைசன் — அரசனாக, முன் நாளில் — முற்காலத்தில், சுரகுரு என்பான்—சுரகுரு என்னும் பெயருடன் வாழ்ந்தவன், அருள்பெற—நல்லருள் பெறுதலை. திருவுளத்து அடைத்து — திருவுள்ளத்திற் கொண்டு, அனையனை—அவனை, வேட்டை வினையினில் வருவித்து—வேட்டைத் தொழிலில் புகுத்தி, அவன் செய் — அதில் அவன் அறியாது செய்த, கோகத்தி ஆதிய — பசுக்கொலை முதலிய பாவங்கள், தேய்ந்து அரை பொடி ஆகி அழிவு உற—தேய்வுற்று அரைபட்ட பொடியாகி ஒழிய, சம்பு ஆதி என்று—சம்புவும் ஆதியும் என்று சொல்லப் பெறுகின்ற, இரு கழுகு அறவோர்—இரண்டு கழுகு வடிவம் கொண்ட முனிவர்கள், அலகினால் அமைத்த—அலகுகளால் கீறி உண்டாக்கிய, சுனையில் மூழ்குவித்து—பாறை நீர் நிலையில் மூழ்கும்படி செய்து, அங்கு — அவ்விடத்தில், அலகு இலாத் திருப்பணி ஆற்றி—அளவில்லாத திருப்பணிகளைச் செய்து. அரை மதி நுதல்—பிறைத் திங்களை ஒத்த நெற்றியை உடையவளாகிய, இமாசலை பால் — மலைமகள் இடமாக, உன் அருள் பெறீஇ—உனது அருளைப் பெற்று, உய்ய—உய்யும்படி, வீடு அளித்தாய்—முத்தியை வழங்கினாய்,

அருள் கொழிக்கின்ற — திருவருள் பெருக்கெடுத்து வருகின்ற, திருக்கழுக்குன்றின் அமலனே—திருக்கழுக் குன்றத் திருத்தலத்திலே எழுந்தருளியுள்ள இயல்பாகவே பாசங்களின் நீங்கியவனே, அமரர் நாயகனே—விண்ணோர் தலைவனே, அரைதிகழ்—இடையில் விளங்குகின்ற, சரும அம்பர—புலித்தோல் ஆடையை உடையவனே, திகம்பரன் என்று—ஆடையில்லாதவன் என்று, அறைகுவது என் கொல்-சொல்லுவது என்ன காரணம் நின்றனை—உன்னை, வேதாகமம் ஆதிய- வேதாகமம் முதலிய நூல்கள், ஒன்றினும்—எதிலும், தோயா அதீதன் ஆம் என் சூசகமோ—பொருந்தாது அப்பாற் பட்டு இருப்பவன் என்று உரைக்கும் குறிப்போ, ஏகாரங்கள்—அசை.

உலகுய வருள் கொண் டுன்னில்வே ருகா
வொருமைகொ ணந்தியெம் பெருமா
னுன்னரு ளதனுற் பன்னரும் வாத
வூரில்வந் தருளரு மறையோர்
குலமணி மணிவா சகமணிக் கருளுங்
குருமணி யாய்க்கணக் கில்லாக்
கோலநேர் காட்டு மூலமா மணியே
கோதெலா மொருங்கொழித் திரண்டற்
றிலகுபே ரன்ப ருளத்தடத் தருட்டே
னெங்கணும் பிரவகித் திலங்கு
மிணையிலாக் கமலத் துணை மல ரடியிவ்
வேழையேன் றலைக்கணி யாமோ
வலகிலா ரமுதே யருட்பெருங் கடலே
யன்னையே யத்தனே யரசே
யருட் கொழி க்கின்ற திருக்கழுக் குன்றி
னமலனே யமரர்நா யகனே 10

கொண்டு கூட்டு:— அலகில் ஆரமுதே அருட் பெருங் கடலே அன்னையே அத்தனே அரசே அருள் கொழிக்கின்ற திருக்கழுக்குன்றின் அமலனே அமரர் நாயகனே உலகு உய்ய அருள் கொண்டு உன்னில் வேறு ஆகா ஒருமை கொள் நந்தியெம் பெருமான் உன் அருளதனுல் பன்னரும் வாதவூரில் வந்து அருள் அரு மறையோர் குலமணி மணிவாசக மணிக்கு அருளும் குருமணியாய்க் கணக்கில்லாக் கோலம் நேர் காட்டும் மூல மாமணியே கோது எ(ல்)லாம் ஒருங்கு ஒழித்து இரண்டற்று இலகு பேரன்பர் உளத்தடத்து அருள் தேன் எங்கணும் பிரவகித்து இலங்கும் இணை இலாக் கமலத்துணை மலர் அடி இவ் ஏழையின் தலைக்கு அணியாமோ

பதவுரை:— அலகில் ஆரமுதே — அளவிட முடியாத பேரமுதப் பொருளே, அருட்பெருங் கடலே - கருணைப் பெருங்கடலே, அன்னையே - தாயே, அத்தனே — தந்தையே, அரசே - இறைவனே, அருள் கொழிக் கின்ற-திருவருள் பெருக்கெடுத்து வருகின்ற, திருக் கழுக்குன்றின் அமலனே - திருக்கழுக்குன்றத்திருத் தலத்திலே எழுந்தருளியுள்ள இயல்பாகவே பாசங்களின் நீங்கியவனே, அமரர் நாயகனே - விண்ணோர் தலைவ னே, உலகு உய்ய-உலகம் உய்யும்படி, அருள் கொண்டு கருணை கொண்டு,உன்னில் வேறு ஆகா உன்னிலிருந்து வேறுபடாத, ஒருமைகொள் - அத்துவித நிலையை அடைந்த, நந்தியெம் பெருமான் - திருநந்தி தேவராகிய எமது தலைவர், உன் அருளதனுல்-உனது திருவருளால் பன்னரும்-சொல்லுதற்கரிய, வாதவூரில் வந்து அருள்— திருவாதவூரில் அவதரித்தருளிய, அருமறையோர் குல- மணி-அரிய வேதியர் குல மணியாகிய மணிவாசக மணிக்கு — அந்த மணிவாசக மணிக்கு, அருளும் குரு மணியாய் — அருள் செய்கின்ற ஆசாரிய ரத்தினமாய் கணக்கில்லாக் கோலம் — எண்ணப்படாத திருவருட்

கோலத்தை, நேர் காட்டும் — நேரே காட்டிய, மூல மாமணியே — அனைத்துக்கும் அடிப்படையான பேராளிப் பொருளே, கோது எல்லாம் — மலமாசுகள் அனைத்தையும், ஒருங்கு ஒழித்து — ஒருபடியாக நீக்கி, இரண்டற்று இலகு — அத்துவிதமாக விளங்குகின்ற, பேரன்பர் உளத் தடத்து - மெய்யன்பர்களின் உள்ளப் பொய்கையில், அருள்தேன் — திருவருள் தேனமுது, எங்கணும் பிரவகித்து — எல்லா இடங்களிலும் பாய்ந் தோடி, இலங்கும் — விளங்கும்படி செய்கின்ற. இணை யிலா — ஒப்பில்லாத, கமலத்துணை மலர் அடி இரண்டு தாமரைப்பூந் திருவடிகள், இவ் ஏழையின் தலைக்கு—இவ் வெளியேனது சென்னிக்கு, அணியாகோ — அழகு செய்யுமோ.

சுரகுரு வெனும்பே ரரசனை வலியத்
தொடர்ந்திழுத் துன்றிருப் பணியிற்
றொடக்கிநீந் தளவா வளனெலா மீற்றிற்
சொலற்கரும் பேரின்ப வீடுந்
தருதயா நிதிநீ யன்புளஞ் செலுத்தத்
தலைப்பெருஞ் சிறப்புணர்ந் துனக்காந்
தகுதிருப் பணிசெய் தட்டபந் தனமா
சாந்தியா தியபுரி பெரியோர்க்
கிருநிதி மகப்பே றட்டபோ காதி
யிட்டகா மியமெலா மளித்தே
யின்பவீ டதுவும் பின்புறத் தருவா
யென்பது மியம்பவேண் டுவதோ
வருணெறிப் புகுதா மருளனே னினக்கே
யடைக்கல மிடைக்கல மல்லே
னருட்கொழிக் கின்ற திருக்கழுக் குன்றி
னமலனே யமரர்நா யகனே. 11

கொண்டு கூட்டு:— அருள் கொழிக்கின்ற திருக்கழுக் குன்றின் அமலனே அமரர் நாயகனே சுரகுரு என்னும் பேரரசனை வலியத் தொடர்ந்து இழுத்து உன் திருப் பணியில் தொடக்கி அளவா வளன் எ(ல்)லாம் ஈந்து ஈற்றில் சொலற்கு அரும்பேரின்ப விடும் தரும் தயாநிதி நீ அன்பு உளம் செலுத்தத் தலப் பெரும் சிறப்பு உணர்ந்து உனக்கு ஆம் தகு திருப்பணி செய்து அட்ட பந்தன மாசாந்தி ஆதியபுரி பெரியோர்க்கு இருநிதி மகப்பேறு அட்ட போக(ம்) ஆதி இட்ட காமியம் எ(ல்)லாம் அளித்துப்பின்பு இன்ப வீடு அதுவும் உறத் தருவாய் என்பதும் இயம்ப வேண்டுவதோ அருள்நெறிப் புகுதா மருளனேன் நினக்கே அடைக்கலம் இடைக்கலம் அல்லேன்

பதவுரை;— அருள்கொழிக்கின்ற திருவருள் பெருக்கெடுத்து வருகின்ற, திருக்கழுக்குன்றின் அமலனே — திருக் கழுக்குன்றத் திருத்தலத்திலே எழுந்தருளியுள்ள இயல் பாகவே பாசங்களின் நீங்கியவனே, அமரர் நாயகனே— விண்ணோர் தலைவனே, சுரகுரு என்னும் பேரரசனை— சுரகுரு என்னும் பெயரையுடைய மன்னர் மன்னனை— வலியத்தொடர்ந்து இழுத்து — வேட்டை முகத்தில் செல்லும்பொழுது வலிந்து பற்றி உன்பால் இழுத்து— உன் திருப்பணியில் தொடக்கி — நினது திருத்தொண் டில் ஈடுபடுத்தி, அளவாவளன் எல்லாம் ஈந்து — அளவு படாத பேறுகள் அனைத்தையும் வழங்கி, ஈற்றில்-இறு தியில், சொலற்கு அரும்-சொல்லுதற்கு அரிய, பேரின்ப வீடும் தரும் — பேரின்ப முத்தியையும் தந்தருளிய, தயா நிதி நீ—கருணை நிதி நீ ஆவாய், அன்பு உளம் செலுத்த, அன்புள்ளம் உன்னிடம் செலுத்த, தலப்பெரும் சிறப்பு உணர்ந்து—உனது திருக்கழுக்குன்றத் தலத்தின் பெருஞ் சிறப்பை அறிந்து, உனக்கு ஆம் தகு திருப்பணி செய்து — உனக்கேற்ற தக்க திருப்பணிகளைச்செய்து, அட்டபந்தன மாசாந்தி ஆதிய — கருங் குங்குலியம்

வெண் குங்குலியம், சுக்கான், தேன்மெழுகு, செம்பஞ்சு உலாந்தா லிங்கம், கொம்பரக்கு, காவிக்கல் முதலிய வற்றுடன் வெண்ணெய் கூட்டி இடித்துப்பந்தனம் செய்யும் பெருஞ்சாந்தி முதலியவற்றை, புரி பெரி யோர்க்கு — செய்யும் பெரியவர்களுக்கு. இருநிதி மிகுதி யான செல்வம்: மகப்பேறு—நன்மக்கட்பேறு, அட்ட போகம் ஆதி செல்வம், கல்வி, தானியம், அஞ்சாமை வெற்றி, வீரம், சந்தானம், இன்ப நுகர்ச்சி முதலிய இட்ட காமியம எல்லாம்—விரும்பி வேண்டும் அனைத் தையும், அளித்து— வழங்கி. பின்பு—அம்மையில், இன்ப வீடு அதுவும் உற—பேரின்ப முத்தியும் பொருந்தும்படி தருவாய் என்பதும்—அருளுவாய் என்பதும், இயம்ப வேண்டுவதோ—சொல்ல வேண்டுமோ. அருள்நெறிப் புகுதா—திருவருள் நெறியிலே செல்லாத, மருளனேன்— மயக்கத்தை உடைய யான் நினக்கே அடைக்கலம்— உனக்கே அடைக்கலம் பூண்டுள்ளேன். இடைக்கலம் அல்லேன்—இடையில் வேறு பற்றுக்கோடு உடையேன் அல்லேன். ஏ அசை.

உலகிலெத் தொழிலும் புரிபவ ரெவரவ்
வுறுபல னவரடை குவரென்
றோதுப வீதென் னின்றிருப் பணியீங்
குஞற்றுந ருஞற்றுவித் தவரே
கலவுதம் பொருளி னளவினுக் கியையக்
கரவிலா நிறைபொரு ளளித்தோர்
கைப்பொரு ளிலையே யிப்பணிக் கெனவுட்
கரைந்தவர் விரைந்துடன் முயன்றோர்
குலவுநின் மகிமை விரிந்துரைத் தாம்பொன்
கொடுப்பித்தோர் முடிப்பித்தோ ரின்னுங்
கூறுபற் பலசா தகங்களும் புரிநற்
குணத்தின ரிவரெலா மொருங்கே
யலகிலாப் பெருவாழ் விம்மையி னடைந்தே
யம்மைவீ டடைகுவ ரென்ப
வருட்கொழிக் கின்ற திருக்கழுக் குன்றி
னமலனே யமரர்நா யகனே. 12

கொண்டு கூட்டு:- அருள் கொழிக்கின்ற திருக்கழுக்குன்றின் அமலனே அமரர் நாயகனே உலகில் எத்தொழிலும் புரிபவர் எவர் அவ் உறுபலன் அவர் அடைகுவார் என்று ஓதுப ஈது என் நின் திருப்பணி ஈங்கு உஞற்றுவித்தவர் கலவு தம் பொருளின் அளவினுக்கு இயையக்கரவு இ(ல்)லாத நிறை பொருள் அளித்தோர் கைப்பொருள் இலேயே இப்பணிக்கு என உள் கரைந்தவர் விரைந்து உடன் முயன்றோர் குலவும் நின் மகிமை விரித்து உரைத்து ஆம் பொன் கொடுப்பித்தோர் இன்னும் கூறு பற்பல சாதகங்களும் புரி நற் குணத்தினர் இவரெலாம் ஒருங்கே அலகிலாப் பெருவாழ்வு இம்மையின் அடைந்து அம்மை வீடு அடைகுவர் என்ப.

பதவுரை:— அருள் கொழிக்கின்ற—திருவருள் பெருக்கெடுத்து வருகின்ற, திருக்கழுக்குன்றின் அமலனே—திருக்கழுக்குன்றத் திருத்தலத்திலே எழுந்தருளியுள்ள இயல்பாகவே பாசங்களின் நீங்கியவனே, அமரர் நாயகனே—விண்ணோர் தலைவனே, உலகில்—இந்த நிலவுலகத்தில்,எத்தொழிலும் புரிபவர்–எந்தத்தொழிலையும் செய்பவர், எவர்—எவரோ, அவ் உறு பயன்—அதனால் வரும் பயனை, அவர் அடைகுவர் என்று—அவரே பெறுவார் என்று, ஓதுப—சொல்லுவர், ஈது என்—இது என்ன வியப்பு, நின் திருப்பணி—உனது திருப்பணியை, ஈங்கு உஞற்றுநர்–இங்கே செய்தவர்களும், உஞற்றுவித்தவர்–செய்வித்தவர்களும், கலவு—கிடைத்துள்ள, தம் பொருளின் அளவினுக்கு—தமது செல்வத்தின் அளவுக்கு, இயைய—பொருந்தும்படி, கரவு இலாது—ஒளித்தல் செய்யாமல், நிறைபொருள் அளித்தோர்—பெரும் பொருளை வழங்கியவர்களும், கைப்பொருள் இலேயே—தம் கையில் பொருள் இல்லையே, இப்பணிக்கு என—இந்தத் திருப்பணிக்கு என்று, உள் கரைந்தவர்—மனம் உருகியவர்களும், விரைந்து—வேகமாக, உடன்முயன்றோர்—திருப்பணி முயற்சியில் ஈடுபட்டவர்களும்,

குலவும்—விளங்குகின்ற, நின் மகிமை விரித்து உரைத்து-
உனது அருட் சிறப்புக்களை விரித்துக் கூறி, ஆம்
பொருள் கொடுப்பித்தோர்—நிறைந்த பொருளைக்கொடுக்
கும்படி செய்தவர்களும், முடிப்பித்தோர்-திருப்பணியைக்
குறையின்றி நிறைவு செய்தவர்களும், இன்னும்-மேலும்,
கூறு-சொல்லப் பெறுகின்ற, பற்பல சாதகங்களும் புரி-
பலவாகிய உதவிகளையும் செய்கின்ற, நற்குணத்தினர்
இவர் எலாம்—நல்ல குணம் உடையவர்களுமாகிய
இவர்கள் அனைவரும், ஒருங்கே—ஒன்றுபட்டு, அலகிலா-
அளவில்லாத, பெருவாழ்வு—பெரிய வாழ்வை, இம்மை
யின் அடைந்து—இகலோகத்தில் பெற்று, அம்மை—
சிவலோகத்தில், வீடு அடைகுவர் என்ப - முத்தியையும்
பெறுவர் என்று சொல்லுவர். ஏகாரங்கள் - அசை.

இப்புவி யிடைநின் னுெப்பின்மா தலங்க
ளெப்பெரு மகிமையும் வாய்ந்த
வென்னினு மென்னு மிசைத்துமித் தலம்போ
லெண்ணுதற் கொண்ணுமோ வேனை
யெப்பெருந் தலமுஞ் செப்புநூல் களினு
ளிலக்குவ சுத்தமாண் பெவையு
மேவருந் தினமும் விழியினேர் காண
விருகழு குருவமா முனிவோர்
தப்பற வியற்று மற்புத மொன்றே
சங்கதீர்த் தத்திலெஞ் ஞான்றுஞ்
சாருமா றிரண்டாண் டினுக்கொரு முறைசார்
தகுவலம் புரியதி சயமு
மப்புகன் முறையே யுருமுசேர்ந் தொளிசெ
யருமையும் பெருமையு மமைந்த
வருட்கொழிக் கின்ற திருக்கழுக் குன்றி
னமலனே யமரர்நா யகனே. 13

கொண்டு கூட்டு:- ஏவரும் தினமும் விழியில் நேர் காண இரு கழுகு உருவமா முனிவோர் தப்பு அற இயற்றும் அற்புதம் ஒன்றோ சங்க தீர்த்தத்தில் எஞ்ஞான்றும் சாரும் ஆறிரண்டு ஆண்டினுக்கு ஒருமுறை சார் தகு வலம்புரி அதிசயமும் அப் புகல் முறையே உருமு சேர்ந்து ஒளி செய் அருமையும் பெருமையும் அமைந்த அருள் கொழிக்கின்ற திருக்கழுக்குன்றின் அமலனே அமரர் நாயகனே இப் புவியிடை நின் ஒப்பு இல் மாதலங்கள் எப்பெரு மகிமையும் வாய்ந்த என்னினும் என் ஆம் இசைத்தும் இத்தலம் போல் எண்ணுதற்கு ஒண்ணுமோ ஏனை எப்பெரும் தலமும் செப்பும் நூல்களினுள் தத்தம் மாண்பு எவையும் இலக்குவ.

பதவுரை:- ஏவரும்—எல்லோரும், தினமும்—நாள்தோறும், விழியில் நேர் காண—கண்களால் நேரே காணும்படி, இரு கழுகு உருவ மா முனிவோர்—இரண்டு கழுகு வடிவம் கொண்ட பெரிய முனிவர்கள், தப்பு அற—தமது சாபம் நீங்குவதற்கு, இயற்றும் அற்புதம் ஒன்றோ—வந்து வழி பாடு செய்யும் மேன்மை ஒன்று மட்டுமோ? சங்க தீர்த்தத்தில்—சங்கதீர்த்தம் என்னும் புண்ணியப் பொய்கையில், எஞ்ஞான்றும் சாரும்—எப்பொழுதும் வருகின்ற, ஆறு இரண்டு ஆண்டினுக்கு ஒருமுறை—பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒரு தடவை, சார்—தோன்றி எழும்புகின்ற, மிகு—மேலான, வலம்புரி அதிசயமும்—வலம்புரிச் சங்க அதிசயமும், அப் புகல் முறையே—அங்ஙனம் சொல்லிய முறையிலேயே, உருமு சேர்ந்து—இடி மின்னல் தோன்றி, ஒளி செய் அருமையும்—பேரொளியை உண்டாக்குகின்ற, அருமையும், பெருமையும்-மற்றும் பல பெருமைகளும், அமைந்த—பொருந்திய, அருள் கொழிக்கின்ற—திருவருள் பெருக்கெடுத்து வருகின்ற, திருக்கழுக்குன்றின் அமலனே — திருக்கழுக்குன்றத் திருத்தலத்திலே எழுந்தருளியுள்ள இயல்பாகவே பாசங்களின் நீங்கியவனே, அமரர் நாயகனே-விண்ணோர் தலை

வனே, இப்புவியிடை-இந்த நிலவுலகத்தில், நின்-உனது, ஒப்புஇல்—இணை இல்லாத, மாதலங்கள் — பெரிய திருத் தலங்கள், எப்பெரு மகிமையும்-எந்தப்பெரியசிறப்பையும், வாய்ந்த என்னினும்—கொண்டன என்றாலும், என் ஆம் இசைத்தும்—என்னவாகச் சொல்லுவோம், இத்தலம் போல்எண்ணுதற்கு ஒண்ணுமோ-இந்தத்திருத்தலத்தைப் போல் நினைப்பதற்கு அமையுமோ, ஏனை எப்பெரும் தலமும்-மற்ற எந்தப் பெரிய தலங்களும், செப்பும் நூல் களினுள்-சொல்லப்பெறும் நூல்களில் மட்டுமே. தத்தம் மாண்பு எவையும் இலக்குவ-தத்தமது சிறப்புக்கள் அனைத்தையும் எடுத்து விளக்கிக் கொண்டிருக்கின்றன.

நாதனே நீவீற் றிருக்குமித் தலத்தி
னன்மையின் றன்மையார் நவில்வார்
நால்வருந் துதித்தார் பால்வரும பிரம
னரணன் பாநுவிந் தொருநால்
வேதநேர் கோடி யுருத்திரர் நந்தி
விபுதர்கோ னிரு வசுக்கள்
விமலமா மலய முனிவரன் வசிட்டன்
மேற்கொளு மார்க்கண்ட விறலோன்
மாதவன் சம்பு கௌசிகன் சனகன்
மற்றள வகன்முனி கணங்கள்
வருணனே சத்த மாதர்கோ தமனார்
மனுமுத லெனைப்பலர் வந்தாங்
காதிநீ யருள்பல் பூதிபெற் றுய்ந்தா
ரவர்தொகை யெனுமியம் பரிதா
லருட்கொழிக் கின்ற திருக்கழுக் குன்றி
னமலனே யமரர்நா யகனே 14

கொண்டு கூட்டு: அருள் கொழிக்கின்ற திருக்கழுக்குன்றின் அமலனே அமரர் நாயகனே நாதனே நீ வீற்றிருக்கும் இத்தலத்தின் நன்மையின் தன்மை யார் நவில்வார் நால்வரும் துதித்தார் பால்வரும் பிரமன் நாரணன் பானு இந்து ஒரு நால் வேதம் நேர்கோடி உருத்திரர் நந்தி விபுதர் கோன் நாலிரு வசுக்கள் விமலமாம் மலய முனிவரன் வசிட்டன் மேற்கொளும் மார்க்கண்ட விறலோன் மாதவன் சம்பு கௌசிகன் சனகன் மற்று அளவு அகல் முனி கணங்கள் வருணன் சத்தமாதர் கோதமனார் மனை முதல் எனைப்பலர் வந்து ஆங்கு ஆதி நீ அருள் பல்பூதி பெற்று உயர்ந்தார் அவர் தொகை எனும் இயம்பரிது.

பதவுரை:—அருள் கொழிக்கின்ற திருவருள் பெருக்கெடுத்து வருகின்ற, திருக்கழுக்குன்றின் அமலனே—திருக்கழுக்குன்றத் திருத்தலத்திலே எழுந்தருளியுள்ள இயல்பாகவே பாசங்களின் நீங்கியவனே, அமரர் நாயகனே—விண்ணோர் தலைவனே, நாதனே-எல்லாருக்கும் மேலானவனே, நீவீற்றிருக்கும்-நீ எழுந்தருளி யிருக்கின்ற, இத்தலத்தின் நன்மையின் தன்மை-இந்தத் திருத்தலத்தின் அருள்நலத் தன்மையை, யார் நவில்வார்-யாரால் சொல்ல முடியும், நால்வரும் துதித்தார்—சமய குரவராகிய சம்பந்தர், அப்பர், சுந்தரர், மணிவாசகராகிய நால்வரும் பதிகம் பாடித்துதித்தார்கள், பால் வரும்—உனது அருளாணையின் வழியே ஒழுகும், பிரமன்—நான்முகனும், நாரணன்—திருமாலும், பானு—சூரியனும், இந்து—சந்திரனும், ஒரு நால் வேதம்—ஒப்பற்ற நான்கு வேதங்களும், நேர் கோடி உருத்திரர்—தமக்குத்தாமே ஒப்பாகிய கோடி உருத்திரர்களும், நந்தி—திருநந்தி தேவரும், விபுதர் கோன் — தேவர்க்கரசனாகிய இந்திரனும், நால் இரு வசுக்கள் — அட்ட வசுக்களும், விமலமாம் மலய முனிவரன்—மல நீக்கம் பெற்ற அகத்திய முனிவரும், வசிட்டன்—வசிட்ட முனிவரும், மேற்கொள்ளு மார்க்கண்ட விறலோன்—உனது

திருவடிப் பூசையைக் கைக்கொண்ட மார்க்கண்ட முனிவரும், மாதவன் சம்பு—பெரிய தவத்தை உடைய சம்பு முனிவரும், கௌசிகன்—கௌசிக முனிவரும், சனகன்—சனக முனிவரும், மற்று அளவு அகல் முனி கணங்கள்—இன்னும் அளவில்லாத முனிவர் குழாங்களும், வருணன்—வருண பகவானும், சத்த மாதர்—பிராமி, மகேசுவரி, கௌமாரி, நாராயணி, வராகி, இந்திராணி, காளி என்னும் மாதர்களும், கோதமனூர் மனை முதல்—கௌதம முனிவரின் மனைவியாகிய அகலிகை முதலாக, எனைப் பலர் வந்து—இன்னும் பலர் வந்து வழிபட்டு, ஆங்கு—அங்கே, ஆதி—முதற் கடவுளே, நீ அருள் பல் பூதி பெற்று—நீ அருளிய பலவகைச் செல்வங்களையும்பெற்று, உய்ந்தார்—உய்தியை அடைந்தார், அவர் தொகை—அவர்களது எண்ணிக்கை, எனும் இயம்பரிது-இவ்வளவு என்று சொல்ல முடியாததாகும். ஏ, ஆல்—அசை.

தனக்கிணை யிலாதெவ் வுலகமும் பரம்பு
　　தன்பெருங் கீர்த்தியே திரண்ட
தனியுரு வேயோ பிரணவ முருவாய்ச்
　　சமைந்ததோ வென்றகத் தடியார்
மனக்கொளா மகிழ்விற் பல்லிய மாதி
　　வரிசையோ டெதிர் கொளீஇப் பூசை
மரபினிற் புரிந்தா தரமிகக் கொளுமா
　　வலம்புரிச் சங்கமீந் ததுபே
ரெனக்கொளுஞ் சங்க தீர்த்தமிந் திரன்பே
　　ரிலஞ்சிமார்க் கண்டனீர் வசிட்ட
னேல்வைசங் களக மகலிகை சூழி
　　யிவைமுத லளப்பில வாய
வனக்குல வாவி யேபிணி யனைத்து
　　மகற்றியின் பளிப்பதென் சொல்கே
னருட்கொழிக் கின்ற திருக்கழுக் குன்றி
　　னமலனே யமரர்நா யகனே.　　　　15

கொண்டு கூட்டு:- அருள் கொழிக்கின்ற திருக்கழுக்குன்றின் அமலனே அமரர் நாயகனே தனக்கு இணை இலாது எவ்வுலகமும் பரம்பு தன் பெருங் கீர்த்தியே திரண்ட தனி உருவேயோ பிரணவம் உருவாய்ச் சமைந்ததோ என்று அகத்து அடியார் மனக் கொளா மகிழ்வில் பல் இயம் ஆதி வரிசையோடு எதிர்கொளீஇப் பூசை மரபினில் புரிந்து ஆதரம் மிகக் கொ(ள்)ளுமா(று) வலம்புரிச் சங்கம் ஈந்து அது பேர் எனக் கொ(ள்)ளும் சங்க தீர்த்தம் இந்திரன் பேர் இலஞ்சி மார்க்கண்டன் நீர் வசிட்டன் ஏல்வை சங்க(அ)ளகம் அகலிகை சூழி இவை முதல் அளப்பு இலவாய வனக்குலவாவியே பிணி அனைத்தும் அகற்றி இன்பு அளிப்பது என் சொல்கேன்

பதவுரை:— அருள் கொழிக்கின்ற—திருவருள் பெருக் கெடுத்து வருகின்ற, திருக்கழுக் குன்றின் அமலனே— திருக்கழுக்குன்றத் திருத்தலத்திலே எழுந்தருளியுள்ள இயல்பாகவே பாசங்களின் நீங்கியவனே, அமரர் நாய கனே—விண்ணோர் தலைவனே. தனக்கு இணை இலாது— தனக்கு ஒப்பு இல்லாது, எவ்வுலகமும் பரம்பு-எல்லா உலகங்களிலும் விரிகின்ற, தன் பெரும் கீர்த்தியே— தனது பெரிய புகழே, திரண்ட—ஒன்று கூடிய, தனி உருவேயோ-ஒப்பற்ற உருவமோ, பிரணவம் உருவாய்ச் சமைந்ததோ என்று-ஓங்காரம் உருக்கொண்டு வந்ததோ என்று, அகத்து அடியார்—அணுக்கத் தொண்டர்கள், மனக்கொளா மகிழ்வில் – மனத்திற் கொண்ட களிப் பினால், பல் இயம் ஆதி வரிசையோடு-பல வாத்தியங் களாகிய சிறப்புக்களுடன், எதிர் கொளீஇ—எதிர் கொண்டு, பூசை மரபினில் புரிந்து—பூசையை விதிப்படி செய்து, ஆதரம் மிகக்கொள்ளுமாறு—அன்பு மிகக் கொள்ளும்படி, வலம்புரிச்சங்கம் ஈந்து—வலம்புரிச் சங்கத்தைப் பெற்று, அது பேர் எனக் கொள்ளும் சங்க தீர்த்தம்—அதையே பேராகக் கொண்ட சங்க தீர்த்த

மும், இந்திரன் பேர் இலஞ்சி—பெரிய இந்திர தீர்த்தமும் மார்க்கண்டன் நீர்—மார்க்கண்ட தீர்த்தமும், வசிட்டன் ஏல்வை-வசிட்ட தீர்த்தமும், சங்க அளகமும்—சம்பாதி தீர்த்தம் என்னும் கழுகு தீர்த்தமும், அகலிகை சூழி—அகலிகை தீர்த்தமும். இவை முதல்-ஆகிய இவைமுதலிய, அளப்பு இலவாய—அளவில்லாத, வனக்குல வாவியே-அழகிய மேலான தடாகங்களே, பிணி அனைத்தும் அகற்றி—துன்பங்கள் எல்லாவற்றையும் ஒழித்து, இன்பு அளிப்பது—இன்பத்தை வழங்குவனவாம், என் சொல்கேன்—இவற்றின் சிறப்பை எங்ஙனம் சொல்லு வேன்.

பொன்னிடை மணிபோ லன்பர்க ளிதய
 புண்டரீ கத்தம ருனது
பொற்பத மெளியேன் மனவயத் துறற்கோர்
 பொருத்தமின் றென்னினு மெந்தாய்
நின்னடி யெவையுந் தன்மய மாக்கு
 நிலைமைய திரும்பைப்பொன் னுக
நிகழ்த்துவ தரிதன் றையனே யரசே
 நீசனே னுய்வகை யருளாய்
தன்னிடை வாயு திசையிற்சஞ் சீவி
 தானுறு மேன்மைகொண் டதனைச்
சார்ந்திழி யருவி மண்மருந் தானேய்
 சகலமு மிகலறத் தவிர்த்தே
யன்னையி னுயிர்கட் கின்னலனென்று
 மனைவருங் காணநே ரளிக்கு
மருட்கொழிக் கின்ற திருக்கழுக் குன்றி
 னமலனே யமரர்நா யகனே 16

கொண்டு கூட்டு:— தன் இடை வாயு திசையில் சஞ்சீவி உறும் மேன்மை கொண்டு அதனைச் சார்ந்து இழி அருவி மண் மருந்து ஆனோய் சகலமும் இகல் அறத் தவிர்த்து உயிர்கட்கு அன்னையின் இன் நலன் என்றும் அனைவரும் காண நேர் அளிக்கும் அருள் கொழிக்கின்ற திருக்கழுக் குன்றின் அமலனே அமரர் நாயகனே பொன் இடை மணி போல் அன்பர்கள் இதய புண்டரீகத்து அமர் உனது பொற்பதம் எளியேன் மன வயத்து உறற்கு ஓர் பொருத்தம் இன்று என்னினும் எந்தாய் நின் அடி எவை யும் தன்மயம் ஆக்கும் நிலைமையது இரும்பைப் பொன்னாக நிகழ்த்துவது அரிது அன்று ஐயனே அரசே நீசனேன் உய்வகை அருளாய்

பதவுரை:- தன் இடை வாயு திசையில்—தன்னிடத்தில் வடமேற்குத் திசையில், சஞ்சீவி உறும் மேன்மை கொண்டு—சஞ்சீவி இருக்கும் உயர்வைக் கொண்டு, அதனைச் சார்ந்து இழி அருவி-அச்சஞ்சீவியைச் சார்ந்து சொரிகின்ற அருவியின்கண், மண் மருந்து ஆனோய்— மண் மருந்தாகி விளங்குபவனே, சகலமும்—எல்லாம், இகல் அறத்தவிர்த்து—துன்பம் நீங்குப்படி ஒழித்து, உயிர்கட்கு—உயிர்களுக்கு, அன்னையின்—தாயைக் காட்டிலும், இன் நலன் என்றும்—இனிய நன்மையைச் செய்பவன் என்றும். அனைவரும் காண—எல்லோரும் அறிய, நேர் அளிக்கும்—நேராகக் கருணை புரிகின்ற; அருள் கொழிக்கின்ற—திருவருள் பெருக்கெடுத்து வரு கின்ற, திருக்கழுக் குன்றின் அமலனே—திருக்கழுக் குன்றத் திருத்தலத்திலே எழுந்தருளியுள்ள இயல் பாகவே பாசங்களின் நீங்கியவனே, அமரர் நாயகனே— விண்ணோர் தலைவனே, பொன் இடை மணி போல்— பொன்னின் நடுவில் பதித்த இரத்தினத்தைப் போல, அன்பர்கள் இதய புண்டரீகத்து—மெய்யன்பர்களின் மனத்தாமரையில். அமர்—வீற்றிருக்கின்ற, உனது

பொற் பதம்—உனது பொலிவு பெற்ற திருவடிகள், எளியேன் மன வயத்து உறற்கு—எளியேனது மன வயப்பட்டுப் பொருந்துவதற்கு, ஓர் பொருத்தம் இன்று—ஒரு பொருத்தமும் இல்லை, என்னினும்—என்றாலும், எந்தாய்—எனது தந்தையே, நின் அடி எவையும் தன் மயம் ஆக்கும் நிலைமையது—உனது திருவடிகள் எவற்றையும் தன்வயப் படுத்தும் ஆற்றலுடையவை, இரும்பைப் பொன்னாக நிகழ்த்துவது அரிது அன்று—இரும்பைப் பொன்னாகச் செய்வது அத்திருவடிகளுக்கு அரிய செயலில்லை, ஐயனே—தலைவனே, அரசே—இறைவனே, நீசனேன் உய்வகை அருளாய்—கீழ்மையேன் உய்யும் வகையை அருளுவாயாக. தான். ஏ அசை.

படியினி லெவரு நினைப்பருந் தீமை
பலப்பல மனப்படப் பயிற்றும்
பதகனு யினுந்தாய் நீயெனைத் தெருட்டிப்
பரிந்தணைத் தருடியல் லதைவெங்
கொடியைநீ யென்னு வொறுக்குதி யாது
குறித்தியற் றிடினுமுய் வுளதே
கோதிலா ரமுதே யோதிமா சலைபாற்
குழகனே யழகனே யருளாய் 17

முடிநடு வடிமூன் றிடத்தினு மிலிங்க
முறைநிறீஇச் சுரகுரு வேந்தன்
முன்னிநின் றிறைஞ்ச வன்னவன் பாவ
முழுதும்வா யசவுரு வாய்வீழ்ந்
தடியொடு மழிய நெடியபே ரருள்செய்
தவிர்தரு சிவமய மளித்த
வருட்கொழிக் கின்ற திருக்கழுக் குன்றி
னமலனே யமரர்நா யகனே

கொண்டு கூட்டு:— முடி நடு அடி மூன்று இடத்தினும் இலிங்கம் முறை நிறீஇச் சுரகுரு வேந்தன் முன்னி நின்று இறைஞ்ச அன்னவன் பாவம் முழுதும் வாயச உருவாய் வீழ்ந்து அடியொடும் அழிய நெடிய பேரருள் செய்து அவிர்தரு சிவமயம் அளித்தஅருள் கொழிக்கின்ற திருக்கழுக்குன்றின் அமலனே அமரர் நாயகனே படியினில் எவரும் நினைப்பரும் தீமை பலப்பல மனப்படப் பயிற்றும் பதகன் ஆயினும் தாய் நீ எனைத் தெருட்டிப் பரிந்து அணைத்து அருள்தி அல்லதை வெங்கொடியை நீ என்னு ஒறுக்குதி யாது குறித்து இயற்றிடினும் உய்வு உனது கோதில் ஆர் அமுதே ஓது இமாசலை பால் குழகனே அழகனே அருளாய்.

பதவுரை: முடி நடு அடி மூன்று இடத்தினும்—உச்சி, நடு, அடி ஆகிய மூன்று இடங்களிலும், இலிங்கம் முறை நிறீஇ—சிவலிங்கத்தை விதிப்படி தாபித்து, சுரகுரு வேந்தன்—சுரகுரு என்னும் அரசன், முன்னி நின்று இறைஞ்ச—சிந்தித்திருந்து வழிபட, அன்னவன் பாவம் முழுவதும்—அவனது தீவினை அனைத்தும், வாயச உருவாய் வீழ்ந்து—கருங்காக்கை வடிவத்துடன் விழுந்து, அடியொடும் அழிய—அடியோடு தொலைய, நெடிய பேரருள் செய்து—நிலையான பெருங்கருணையைப் புரிந்து, அவிர்தரு சிவமயம் அளித்த—விளங்குகின்ற சிவ சாயுச்சியத்தை வழங்கிய, அருள் கொழிக்கின்ற—திருவருள் பெருக்கெடுத்து வருகின்ற, திருக்கழுக்குன்றின் அமலனே—திருக்கழுக்குன்றத் திருத்தலத்திலே எழுந்தருளியுள்ள இயல்பாகவே பாசங்களின் நீங்கியவனே, அமரர் நாயகனே—விண்ணோர் தலைவனே, படியினில்—நிலவுலகத்தில், எவரும் நினைப்பரும் தீமை—யாரும் நினைக்கக் கூட முடியாத தீமைகள், பலப்பல—மிகப் பலவற்றை, மனப்படப் பயிற்றும்—மனம் பொருந்தச் செய்கின்ற, பதகன் ஆயினும்—பழியுடையவன் ஆனாலும், தாய் நீ—

நீ எனக்குத் தாயாவாய், எனைத் தெருட்டி—எனக்குத் தெளிவுண்டாகும்படி செய்து, பரிந்து அணைத்து—அன்பு செய்து அணைத்து, அருள்தி—அருள்புரிவாயாக, அல்லதை—அல்லா விட்டாலும், வெம் கொடியை நீ என்று—நீ மிகப் பொல்லாதவனென்று, ஒறுக்குதி—தண்டிப்பாயாக, யாது குறித்து இயற்றிடினும்—எதைக் குறித்துச் செய்தாலும், உய்வு உளது—அதனால் எனக்கு உய்தியே கிடைக்கும், கோதில் ஆர் அமுதே—குற்ற மற்ற பேரமுதம் போன்றவனே, ஓது இமாசலைபால் குழகனே—சொல்லப் பெறுகின்ற மலையரசன் மகளை ஒரு பாகத்திற் கொண்ட இளையவனே, அழகனே அருளாய்—அழகு மிக்கவனே கருணை புரிவாயாக ஏ. அசை.

பாவியே னினையுட் பாவியேன் புறத்தும்
பாவியேன் கரவிலே பயிலும்
பதிதனே னருளே பதிதனே ரடியார்
பரந்துவீற் றிருந்தருள் பாங்குஞ்
சேவியே னந்தோ மண்ணிலேன் பிறந்தேன்
றிரிபுர சுந்தரி மணாள
செய்வினை நீக்கி யுய்வினை யருளாய்
திருமலைச் சொக்கநா யகியைக்
கூவியே யழைப்பார்க் கேனெனு மோசை
குறைவிலா தென்றுநேர் கேட்பக்
கொடுத்துமார்க் கண்ட முனியையெந் நாளுங்
கொண்டுதன் பால்வலம் புரிவோர்க்
காவியே யுரோகா தியவொருங் கொழித்தின்
பருளியா வருக்குமா ரமுதா
யருட்கொழிக் கின்ற திருக்கழுக் குன்றி
னமலனே யமரர்நா யகனே, 18

கொண்டு கூட்டு:- திருமலைச் சொக்க நாயகியைக் கூவி, அழைப்பார்க்கு ஏன் எனும் ஓசை குறைவிலாது என்றும் நேர் கேட்பக் கொடுத்து மார்க்கண்ட முனியை எந்நாளும் கொண்டு தன்பால் வலம் புரிவோர்க்கு ஆவி உரோக(ம்) ஆதிய ஒருங்கு ஒழித்து இன்பு அருளி யாவர்க்கும் ஆரமுதாய் அருள் கொழிக்கின்ற திருக்கழுக் குன்றின் அமலனே அமரர் நாயகனே பாவியேன் நினை உள் பாவியேன் புறத்தும் பாவியேன் கரவிலே பயிலும் பதிதனேன் அருளே பதிதன் நேர் அடியார் பரந்து வீற்றிருந்து அருள் பாங்கும் சேவியேன் அந்தோ மண்ணில் ஏன் பிறந்தேன் திரிபுர சுந்தரி மணாளா செய் வினை நீக்கி உய்வினை அருளாய்.

பதவுரை:- திருமலைச் சொக்க நாயகியை—திருமலைமேல் எழுந்தருளியுள்ள சொக்க நாயகித் தாயை, கூவி அழைப்பார்க்கு—குரல் எழுப்பி அழைப்பவர்களுக்கு, ஏன் எனும் ஓசை—ஏன் என்று கேட்கும் ஓசை, குறைவு இலாது—குறைவு இல்லாமல், என்றும் நேர் கேட்பக் கொடுத்து—எப்பொழுதும் முறையாகக் கேட்கும்படி வைத்து, மார்க்கண்ட முனியை எந்நாளும் கொண்டு—மார்க்கண்ட முனிவரை எந்நாளிலும் உடன்கொண்டு தன்பால் வலம் புரிவோர்க்கு—தன்னை வலம் வருபவர் களுக்கு, ஆவி உரோகம் ஆதிய ஒருங்கு ஒழித்து—துன்பம் பிணி ஆகியவற்றை முழுவதும் நீக்கி, இன்பு அருளி—இன்பத்தை வழங்கி. யாவருக்கும் ஆர் அமுதாய்—எல்லோருக்கும் இனிய அமுதமாக. அருள் கொழிக்கின்ற—திருவருள் பெருக்கெடுத்து வருகின்ற, திருக்கழுக்குன்றின் அமலனே—திருக்கழுக்குன்றத் திருத் தலத்திலே எழுந்தருளியுள்ள இயல்பாகவே பாசங் களின் நீங்கியவனே. அமரர் நாயகனே—விண்ணோர் தலைவனே, பாவியேன்—தீவினையாளனாகிய நான், நினை உள் பாவியேன்—உன்னை உள்ளத்தில் வைத்துப்

போற்ற மாட்டேன், புறத்தும் பாவியேன்—வெளியிலும் கண்டு பணிய மாட்டேன், கரவிலே பயிலும் பதி தனேன்—வஞ்சகத்திலேயே பழகுகின்ற கீழ் மகனாகிய நான், அருளே பதி தன் நேர் அடியார்—உனது திரு வருளே பதியப்பெற்ற உனக்கு ஒப்பாகிய மெய்யடி யார்கள், பரந்து வீற்றிருந்து அருள் பாங்கும் சேவி யேன்—விரிந்து எழுந்தருளியுள்ள சிறப்பைக் கண்டும் தொழ மாட்டேன், அந்தோ—ஐயோ, மண்ணில் ஏன் பிறந்தேன்—பூமியில் ஏன் பிறந்தேன், திரிபுர சுந்தரி மணாள—திரிபுர சுந்தரி யம்மையின் மணவாளனே, செய்வினை நீக்கி—நான் செய்த வினையை ஒழித்து, உய் வகை அருளாய்—உய்யும் வகையை அருளிச் செய் வாயாக, ஏகாரங்கள்—அசை.

தன்னையே நிகருங் கைலையஞ் சைலந்
 தன்னிலொன் றுன்னரு ளதனாற்
றருசயி லாதி யிருவிய வேதிற்
 றன்பெயர் தென்கயி லாய
மென்னயா வோருஞ் சொற்றிட நீவீற்
 றிருந்தரு ளிம்மலைக் கியைத்த
வீசனே யுமையா ளேசனே யெமையா
 ளிறைவனே பிறையணி முடியா
யுன்னையே யலது பின்னையே தெளியேற்
 குறுதுணை யறிதிநீ யோவா
வுடல்சுமந் தலுத்து மடநலார் மயக்குற்
 றுலைந்தனன் கலந்தெனை யுதவு
மன்னையே யருத்து மமுதமே யுணர்த்து
 மத்தனே நித்தனே யருளா
யருட்கொழிக் கின்ற திருக்கழுக் குன்றி
 னமலனே யமரர்நா யகனே. 19

கொண்டு கூட்டு:— அருள் கொழிக்கின்ற திருக்கழுக் குன்றின் அமலனே அமரர் நாயகனே தன்னையே நிகரும் கைலை அம் சைலம் தன்னில் ஒன்று உன் அருள் அதனுல் தருசயிலாதி இருவிய ஏதில் தன் பெயர் தென் கயிலாயம் என்ன யாவோரும் சொற்றிட நீ வீற்றிருந் தருள் இம்மலைக்கு இயைத்த ஈசனே உமையாள் நேசனே எமையாள் இறைவனே பிறை அணி முடியாய் உன்னை அலது பின்னைத் தெளியேற்கு உறுதுணை அறிதி நீ ஓவா உடல் சுமந்து அலுத்து மடந(ல்)லார் மயக்கு உற்று உலைந்தனன் கலந்து எனை உதவும் அன்னையே அருத்தும் அமுதமே உணர்த்தும் அத்தனே நித்தனே அருளாய்

பதவுரை:— அருள் கொழிக்கின்ற—திருவருள் பெருக் கெடுத்து வருகின்ற, திருக்கழுக்குன்றின் அமலனே— திருக்கழுக்குன்றத் திருத்தலத்திலே எழுந்தருளியுள்ள இயல்பாகவே பாசங்களின் நீங்கியவனே, அமரர் நாயகனே—விண்ணோர் தலைவனே, தன்னையே நிகரும்— தனக்குத்தானே ஒப்பாகிய, கயிலை அம் சைலம் தன்னில் ஒன்று—கயிலை மலையிலுள்ள சிகரங்களில் ஒன்றை, உன் அருளதனுல்—உன் அருளாணைப்படி, தரு சயிலாதி—, நீ பெற்றருளிய கயிலை முதல்வராகிய திரு நந்திதேவர், இருவிய ஏதில்–நிலை பெற வைத்த காரணத்தால், தன் பெயர் தென் கயிலாயம் என்ன—தனது பெயர் தெட்சண கயிலாயம் என்று, யாவோரும் சொற்றிட— எல்லோரும் சொல்லும்படி, நீ வீற்றிருந்து அருள் இம் மலைக்கு இயைத்த—நீ வீற்றிருந்தருளுகின்ற இந்த மலைக்குப் பொருந்தியது, ஈசனே—யாவர்க்கும் முதல் வனே, உமையாள் நேசனே—உமையம்மையின் பேரன் பனே, எமை ஆள் இறைவனே—எம்மை ஆளுகின்ற தலைவனே, பிறை அணி முடியாய்—பிறைத்திங்களைச் சூடிய சடை முடியை உடையவனே, உன்னை அலாது

பின்னைத் தெளியேற்கு—உன்னையல்லாமல் வேறொரு தெய்வத்தைத் தெளியாத எனக்கு, உறு துணை அறிதி நீ—உற்ற துணை யாரென்று நீயே அறிவாய், ஓவா உடல் சுமந்து—இடையீடின்றி வருகின்ற பிறவிகளில் உடம்புகளைச் சுமந்து, அலுத்து—களைத்து, மட நல்லார் மயக்கு உற்று—இளைய மங்கையரின் மயக்கத்திலே பொருந்தி, உலைந்தனன்—வருந்தி விட்டேன்; கலந்து எனை உதவும் அன்னையே—என்னுடன் இரண்டறக் கலந்து உதவுகின்ற தாய் அனையவனே, அருத்தும் அமுதமே—ஊட்டுகின்ற அமுதாவானே, உணர்த்தும் அத்தனே—எல்லாவற்றையும் அறிவிக்கின்ற தந்தையே, நித்தனே—என்றும் நிலையானவனே, அருளாய்—அருள் புரிவாயாக, ஏகாரங்கள் அசை,

கருணைமா முகிலே முகிலியன் மலைமேற்
கவிந்துநீர் பொழிதலென் னுளமாங்
கல்லினீ புகுந்தா ரருள்பொழிந் திடலுன்
கடமையே மடமையேன் யாதுந்
தெருணிலை யில்லே னருணெறி நில்லேன்
றீயனே னெயினுந் தாய்நீ
சேயெனை யணைத்தா சிரியமாண் புருவாந்
றீக்கையி னேக்கியத் துவிதப்
பொருணல னிறைமெய் கண்டநூல் வழியிற்
புகுத்தியின் பருத்தியன் புளத்திற்
புனிதநின் றனையா னறவிரண் டறக்கொள்
பொய்யில்பே ரின்புற வருளா
யருணிறை யிடத்தாய் கருணிறை மிடற்று
யனைத்துயிர்க் களிக்குமா ரமுதே
வருட்கொழிக் கின்ற திருக்கழுக் குன்றி
னமலனே யமரர்நா யகனே. 20

கொண்டு கூட்டு:— அருள் நிறை இடத்தாய் கருள் நிறை மிடற்ருய் அனைத்து உயிர்க்கு அளிக்கும் ஆரமுதே அருள் கொழிக்கின்ற திருக்கழுக்குன்றின் அமலனே அமரர் நாயகனே கருணை மா முகிலே முகில் மலை மேல் கவிந்து நீர் பொழிதல் இயல் என் உளமாம் கல்லில் நீ புகுந்து ஆரருள் பொழிந்திடல் உன் கடமையே மடமையேன் யாதும் தெருள் நிலை இல்லேன் அருள் நெறி நில்லேன் தீயனேன் ஆயினும் சாய் நீ சேய் எனை அணைத்து ஆசிரிய மாண்பு உருவால் தீக்கையின் நோக்கி அத்துவிதப் பொருள் நலம் நிறை மெய்கண்ட நூல் வழியில் புகுத்தி இன்பு அருத்தி அன்பு உளத்தில் புனித நின்தனை யான் அற இரண்டு அறக்கொள் பொய் இல் பேரின்பு உற அருள்வாய்.

பதவுரை:— அருள் நிறை இடத்தாய்—திருவருள் நிறைந் திருக்கின்ற இடப்பாகத்தை உடையவனே கருள் நிறை மிடற்ருய்—கரு நிறம் தங்கிய கழுத்தை உடையவனே, அனைத்து உயிர்க்கு அளிக்கும் ஆரமுதே—எல்லா உயிர்களுக்கும் வழங்குகின்ற அரிய அமுதம் ஆனவனே அருள் கொழிக்கின்ற—திருவருள் பெருக்கெடுத்து வருகின்ற, திருக்கழுக்குன்றின் அமலனே—திருக்கழுக் குன்றத் திருத்தலத்திலே எழுந்தருளியுள்ள இயல்பாகவே பாசங்களின் நீங்கியவனே, அமரர் நாயகனே— விண்ணேர் தலைவனே கருணை மா முகிலே-கருணையைப் பொழிகின்ற பெரிய மேகம் போன்றவனே, முகில் மலை மேல் கவிந்து—மேகம் மலையின் மேலே படிந்து, நீர் பொழிதல் இயல்—மழை நீரைச்சொரிதல் இயல்பாகும் என் உளமாம் கல்லில்—எனது மனமாகிய கல்லின் மேல், நீ புகுந்து—நீ வந்து, ஆர் அருள் பொழிந்திடல்— அரிய திருவருள் மழையைப் பொழிவது,உன் கடமையே- உனது கடமையேயாகும், மடமையேன்—அறிவில்லாதவனுகிய நான், யாதும் தெருள் நிலை இல்லேன்—

எதனையும் தெளிதற்குரிய வலிமை உடையேனல்லேன் அருள் நெறி நில்லேன்—திருவருள் நெறியில் நிற்க மாட்டேன், தீயனேன் ஆயினும்—தீமை உடையவன் ஆனாலும், தாய் நீ—நீ எனது தாயாவாய், சேய் எனை அணைத்து—பிள்ளையாகிய என்னை அணைத்து, ஆசிரிய மாண்பு உருவால்—ஆசாரிய அருளுருவத்தோடு, தீக்கை யின் நோக்கி—சிவ தீட்சை முறையில் அருள் நோக்கம் செய்து, அத்துவிதப் பொருள்நலம் நிறை—சுத்தாத்து வித சித்தாந்தப் பொருள் நலங்கள் நிறைந்த, மெய் கண்ட நூல் வழியில் புகுத்தி—மெய்கண்ட நூல்கள் கூறும் நெறியில் ஒழுகும்படி வைத்து, இன்பு அருத்தி—இன்பத்தை நுகர்வித்து. அன்பு உளத்தில்—அன்பு பொருந்திய உள்ளத்தில், புனித—தூயவனே, நின்தனை—உன்னை, யான் அற—நானென்னும் ஆன்ம இயல்பு நீங்க, இரண்டு அற—நீயும் நானும் இரண்டாகாமல் ஒன்றும்படி, கொள்—பெறுகின்ற, பொய் இல்—அழி வில்லாத, பேரின்பு உற—சிவ சாயுச்சியப் பேரின்பம் கிடைக்கும்படி, அருளாய்—அருள் புரிவாயாக,

முற்றிற்று






